உ

ஓம் ஸ்ரீ குருவே நம:

# இயனூற் கோவை.

இதனுள்

பனைசை அந்தாதி, சநீசுரர் சதகம், நற்கனி
அந்தாதியும் சேர்க்கப்பெற்றது.

---

இஃது

குன்றக்குடி மேலமடாலயம் மகா சந்நிதானம்

ஸ்ரீமத் கணபதி சுவாமிகளின்

அநுமதிப்படி

---

மதுரை வைத்தியம்

மு. கணபதியா பிள்ளை அவர்களால்

இயற்றப்பெற்று

---

கல்லல்,

ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா.

நாச்சியப்ப செட்டியாரவர்களால்

மதுரை,

ஸ்ரீ ஜெகதாம்பாள் பிரஸில்

அச்சியற்றப்பெற்றன.

---

[அணா 8

1934.

ஓம்

# சாத்துக் கவிகள்.

---

மதுரைத் தமிழ்ச்சங்க பண்டிதர்

குன்றக்குடி மேலமடாலயம்

ஸ்ரீலஸ்ரீ

சித. நாராயணசுவாமி அவர்களியற்றியது.

## வெண்பா.

தேத்தேறு தென்பனசைத் தெட்சிணா மூர்த்திமகிழ்
பாத்தேறு மந்தாதி பாடினான் — பூத்தேரும்
வண்டறையுஞ் சோலை மதுரைக் கணபதியாம்
கண்டறையுஞ் சொல்லான் கனிந்து

ஞாலத்தின் மிக்கதிரு நள்ளாற்றி னெல்வேற்ற
நீலத்தா ரம்பார்க்கோர் நேர்சதக — மாலைகண்டான்
நாவலரும் பாவலனும் நங்கள் கணபதிவேள்
நாவலரு மாவலுற நன்கு.

நெற்குவையும் பொற்குவையும் நேருமெங்கள் கல்விநகர்
நற்கனிக்கோ ரந்தாதி நன்குரைத்தான் — கற்பகலாத்
தென்மதுரை வாழுந் தெருளார் கணபதியாம்
நன்மதுர வாக்கா னயந்து.

உ

ஓம் ஸ்ரீ குருவேநம:

ஸ்ரீ தெச்சிணாமூர்த்தி திருவடிவாழ்க

# பனசை அந்தாதி.

## இதனுள்

கலித்துறையும், யமகமும், திரோட்டகமும், துறையுமாக
(முறையேதொடரும்)

### காப்புக் கலித்துறை

சீரார் பதும வயன்மாலை யாத்திகழ் தென்பனையூர்த்
தாரா ரிராம கிரிப்பெரி யாரருட் சங்கரீ
ணாரார் மகான்றிருத் தெச்சிணா மூர்த்தியந் தாதிசொல்லக்
காரார் கசானன னுங்கந்த வேளுமென் காப்பதுவே.

### நூல்.

முப்பத் திரண்டற முற்றுநன் கோங்கு முதுபனையூர்
செப்பத் திரண்ட சிவக்கொழுந் தேயருட் செல்வவெற்பே
அப்பத் திரண்டதை யாய்ந்துவே தாந்தத் தமைந்தவுன்சீர்
வெப்பத் திரண்டக நாயேனோ கண்டு விளம்புவனே (1)

விளம்புஞ் சதுர்வித சாதனத் தொன்றின் மினுவிலன்பூ
விளம்புஞ் சுவைபுகு கண்ணினல் லார்விழை வான்விரைக்கூ
விளம்புஞ் சையெங்குஞ் சிவமணம் வீசும் பனசையென்கோ
விளம்புங் கவாவெங்க டெச்சிணா மூர்த்தி விரைத்தருளே (2)

அருளா லகந்தை யறநீத் தடியே னகந்திரிந்திண்
டுருளா துனதடிக் கோரணை யாயிட் டுளங்தெளியத்
தெருளா நிறைந்த செகங்காத் தளிக்குஞ் செயலினைக்காட்
டிருளா ததரலகாட் டேர்ச்சங் கரனார்க் கிசைசுதனே (3)

சுதனத்தி யாவா வெனவழுங் காலன்னை சோர்ந்திடவென்
விதனத்தை நீக்கருட் டாயேயென் பார்க்கருள் வேள்பனை
பதனத்தில் வாழும் பசுங்கிளி யாளிவள் பைம்பதும (யூர்ப்
வதனத்தி னன்மருண் டோவெண்ணி லாவுடல் வற்றியதே

வற்றலைப் பாரா வரமென்ன நெஞ்சமே மாத்திரைப்போ
தூற்றலைப் பாரா ரெனவுணீ நோக்கி னுயர் பனையூர்
நற்றலைப் பாரார் குருதெச்சி ணாமூர்த்தி நாதனெங்கும்
நிற்றலைப் பாரா துறுவைகொல் லோவெந்த நோக்துமே (5)

நேரம ராவதி நீள்குடி காத்தலை நீர்க்கடலோர்
நேரம ராவதி னித்திரை கொண்டோ னிணைமருமான்
ஞேரம ராவதி சூர்தடிந் தான்பனை யூரினிற்க
கேரம ராவதிந் தேனோ பிறந்துழ னெஞ்சகமே (6)

நெஞ்சத் தகல்கிலா நின்றாட் கதியுற நித்தனண்ணிக்
கெஞ்சத் தகசெயல் கேடற்ற தென்றனுட் கேட்டடைந்தா
கஞ்சத் தகழிக் கனத்தால நாடகின் காட்சி கண்டெண் (ர்
டஞ்சத் தகதா னறியே னடியே னடைதலென்னே (7)

என்னே ரிலையென் றெழிலிக்கு மேற்கா னெழும் பனையூர்
மன்னே மணியேநீ வாவாவென் பார்க்கருள் வான்மலைமீ
தின்னே யெமைக்கண் டுலாமலர்க் கோதைகை யேந்தியள்
பொன்னே ரனந்துகி ழுழவிப் பூங்கான் புகுந்தனளே (ளிப்

புகுவா ரிசையும் புவியாதி யந்தம் புலரொவிசெய்
தகுவா ரிசையுந் தவிராப் பனைசைவாழ் சாமியென்று
துகுவா ரிசையு முயர்கொங்கை யார்மாட் டுருகியுள்ளப்
பகுவா ரிசையுஞ்நீ பாவிப்ப தோகதி பாவிநெஞ்சே (9)

பாவிக்கு மேதா ரணிமணி யாத்தரும் பண்ணைசுற்றம்
பாவிக்கு மேதா ரணியசெந் தேனெனும் பாற்பனையூர்
பாவிக்கு மேதா ரணியின்பு மீந்தருள் யாவியுன்றுள்
பாவிக்கு மேதா ரணிவாழு னன்பிலர் பார்ப்பரிதே (10)

அரிதரி தென்றனக் கல்லா னிழற்றங் கடிகளென்னச்
சரிதரி தென்றனக் கண்ணுன் கழரூர் தனையனைத்தாங்
கரிதரி தென்றனற் றேரான் களங்கற்ற காட்சியர்க்கன்
றரிதரி தென்றனற் சந்தா சலன்று னளித்தனனே (11)

அளிக்குங் கடவு ளிவரென்று தற்சா ரடியருள்ளக்
களிக்குங் கனகப் பனையூ ரருவி கமழ்சிலம்பி
லளிக்குங் கரிய மலரோதி யோவிய மன்னநடைக்
கொளிக்குங் கொலோபது மத்தோடி யன்னமுடல்குனிந்தே

குனியஞ் சிலைக்கரன் கோவர்த்த னுன்ம குருமுழவுந்
தொனியஞ் சிலைக்கரன் சொல்லறி வாளிதோ சோகநெஞ்சே
இனியஞ் சிலைக்கிய மாகுதி யென்றே டெனப்பொருளாய்த்
தனியஞ் சிலைக்கரி யானுன் பனையூர்த் தபோதனனே (13)

தனதரு மைக்குந் தலையான் மகிழ்முனி சங்கரன்கைத்
தனதரு மைக்குந் தலையாள் தனையவென் சற்குருவே
தனதரு மைக்குந் தலையாழி மாவிசைத் தையலுஞ்சொல்
தனதரு மைக்குந் தலையான் வணங்கத் தகுந்தவனே (14)

தகுந்தன நாடாச் சளச்சழக் கேற்குந் தளிர்க்கழலீந்
தருந்தன னாடாத் தனிலிங்க சங்கர சாதளித்தாய்
சகந்தன நாடாச் சரண்செய்தென் றாலத் தலத்தளியாய்க்
குகந்தன னாடா தடர்ந்தகல் லாவிருந் தோதையனே (15)

ஓதையைக் கண்டா மணியுல கீரே ழுயப்பயக்குந்
தாதையைக் கண்டா மணியென வந்தார் பனசைவெற்பிற்
போதையைக் கண்டா மணிவா சகக்கிளி போயிருந்த
பாதையைக் கண்டா மணிவாசன் மாளிகை பார்த்திலமே(16)

பார்செய்த வேதச் சதுர்முகத் தானும் பணிந்தி னன்னா
டார்செய்த வேதச் சதுவென் றதிசயித் தார்பனையூர்க்
கோர்செய்த பேதச் சதுட்டிய சாதன செய்தினர்க்குஞ்
சீர்செய்த போதச் சரணடை வந்துறுஞ் செந்திருவே (17)

திருவரும் பற்பக வானுமை நீலச் சிகண்டியர்மா
திருவரும் பற்பத் திருமேனி யண்ணலுஞ் சேர்ந்து முல்லைத்
திருவரும் பற்ப மெனுநகைப் பாடலி செல்வரைப்பார்த்
திருவரும் பற்பலர்நோய்தீர்த் தெனவைத்தா ரெந்தையையே

எந்தையை யேகனை யின்றிய இல்லா யியக்கனைக்காண்
சிந்தையை யேகனை யாக்கட லென்னச் செயலெளிதாஞ்
சந்தையை யேகணி தாலசா லத்தழை தானறுத்த
கந்தையை யேய்கடக் கந்தையி னாசைதான் கைத்திடினே

ஆசைதான் கைத்திடி னாகாத தொன்றிலென் றாகமஞ்சொல்
பூசைதான் கைத்தலப் பொன்னேர் புரிகுரு பூங்கிரிமேன்
பீசைதான் வைத்திடு சிங்கத்தி னேரொரு மெல்லியன்மா
னோசைதான்வைத்திங் குலவுங்கொலோசென் றொளிவதற்றே

அற்றரு மாகத் தனுமா னனுட்சென் றறிந்தபொன்னேர்
நற்றரு மாகத் தனுமானற் பாடலி ஞானமைந்தன்
சற்றரு மாகத் தனுமான யென்னிலை தந்தழைத்தாற்
கற்றரு மாகத் தனுமான காட்சியுங் காட்டினனே (21)

காட்டுங் கருணை யுளதெனக் கான்யாறகைத் தகத்துங்
காட்டுங் கருணை யெனத்தான் குவிக்குங் கனப்பனையூர்
காட்டுங் கருணைக் கதிமா தவரும்பர் காசினிதங்
காட்டுங் கருணைந் துழைபார்க் கெளியனைக் காண்மின்களே

எளியனைக் காண்டற் கிதயசெங் கஞ்சத் திருந்தகலா
தளியனைக் காண்டந் தயையா நியாயத் ததிகதிசார்
களியனைக் காண்டக் கலைகளெட் டானைநற் றூலநகர்த்
தளியனைக் காண்டத் தளிர்க்கையா சானையாஞ்சார்ந்தனனே

சார்ந்த மரிக்கிணை தற்காப் பளித்தகந் தன்னிழனே
ரார்ந்த மரிக்கையா ரன்போர்க் கான்பனை யூரசலத்
தேர்ந்த மரிக்கிணை தேசனி வீசுவார்ச் செண்டுமுலைக்
கீர்ந்த மரிக்கிணை யெற்காய் வளர்த்தவன் பேசரிதே (24)

பேசரி யாகும் பெருமானிராம பிறங்கலன் சொல்
லேசரி யாகு மெனத்தாந் தனைக் கண்ட யேந்தலன் றீ
பூசரி யாகும் புரிந்தூ ருவாவிளை பொற்குகனிவ்
வேசரி யாகுங் குருமூர்த்தி யாய்வந்து விண்டனனே (25)

விண்டனச் சோலை வெளிநும்ப லாயிர மெய்விழியோன்
விண்டனச் சோலை யிசைபாதம் பாணி மிசைகொடுஞ்சீர்
விண்டனச் சோதி விதிதால மாநகர் மேவிளங்கோ
விண்டனச் சோதி விரிஞ்சனு மாய்வெளி மேனிற்பனை

நிற்கின்ற நீநின் னிலைநிகழ்த் தாயே. னிலையினிலத்
தெற்கின்ற யாயிழைத் தெங்ஙனீ யென்னிலை யெய்தனே
கற்கின்ற காலங் கடந்தா யினியேசெய் காரணங்கே (ஞ்சே
டெற்கின்றை யாயெனத் தாலநாட்டானடிசேர்குதியே (27

குதிக்குங் குரும்புக் சுறவுள்ள மேநங் குறுமுனிவாக்
குதிக்குங் குருவையுள் ளோம்பென்ப ருள்ளோங் குறுவர்
பதிக்குங் காகப் பனையூர்ப் படர்வனப் பாகமங்கை (மைமாப்
மதிக்குங் கலாப மயிலாதல் சேர்க்கையின் வாசனையே (28)

வாசனை யெங்கு மதிபோல் விளங்கி மலர்பனைசைத்
தேசனை யெங்கள் சிவஞான சித்தனைத் தேடுவருள்
வாசனை மங்கள மாவல்லி பாடலி மைந்தனையெம்
மீசனைத் தெச்சிணை மூர்த்தியைப் பாட லினிதினிதே (29)

பாடம் படிக்கும் பயனென்னை யோவிளைப் பாரலையோம்
பாடம் படிக்கும் பருமாங் குளஞ்சூழ் பனைசைநின்றன்
பாடம் படிக்கும் பருமாங் கருடவா பாரெனவேற்
பாடம் படிக்கும் பருமோ தடிகடாட் பாலகமே (30)

அகத்தா நினைத்தே யகிலங்க ணிகண் டலதயர்ந்தா
னிகத்தா னினைத்தே னிரைகாத் தளித்தா ளியற்கையளி
தகத்தா னறியத் தகாதநே தானெனச் சாற்றடிக்
ணகத்தா னலங்கிளர் தென்றல் நாட்டி னடித்தவரே (31)

நடிக்குந் திருவடி நண்ணுநெஞ் சேகுரு நாதனன்பாய்
முடிக்குந் திகழ்தமிழ்ப் பூமாலை கொண்டென மூவுலகும்
படிக்குந்தவமுறைத்தென்பனையூர்ப்பொறைப் பாவையுக்கத்
துடிக்குந் தகுஞ்சுமை யோசொர்க்க மாமலை சொல்லயனே

சொல்லும் பகவமற் புல்லூர காமச் சுழிக்கடற்குட்
புல்லுங் ககவகப் பொல்லேமெனினும் புணையடைந்தே
னல்லும் பகலு மகலா தெமைக்காத் தவனிநல்லின்
பெய்லும் பதாரமு முள்ளங் குளிர்வா னிருந்தருளே (33)

இரும்பயம் வீரை யெழுத்தா மதித்த விமையவரே
இரும்பயம் வீரை யிழுந்தெமோ டென்றற் றியங்கினுமே
இரும்பயம் சேரினு மெள்ளுரு காக்கல் விதயமெற்கே
இறும்பய னேதினுக் கோபெண்ணை யூரவன் றீந்தனனே

ஈந்தனை நீசர்க் கிசையா யிசைக்கழ லெற்கினியாஞ்
சாந்தனை யன்றிச் சனிப்பவ ஞெசையி லாசையிலாத்
தாந்தனை யாயுந் தரிசியென் கோயிலான் சங்கரன்கா
லாந்தனை யையா வெனுந்தாளி நாட்டி னறத்தரசே (35)

அரசே வுமக்கொரு விண்ணப்ப மென்னுயி ராக்கையெல்
சரசே வடித்தெனுஞ் சாதுகட் கேழைவாழ் தாலபுரி (வாம்
மரசே கரமலே மாணையாங் கண்டூர் மறக்கினின்சொற்
றரசே தனமனங் கண்டா னு மென்பாடு தான்படுமே (36)

தான்படு கண்ணி யெனத்தான் றணையே தரிசியென்பார்
மீன்படு கண்ணியர் மீதாசை யேயெனும் விண்குடை பூங்
கான்படு கண்ணில் கயஞ்சூழ் புனைட்கின் காட்சிதந்தீர்ந்
தேன்படு கண்ணித் திருத்தாண் முடிசிரஞ் சேர்த்தருளே

சிரமத்தை யீனுமின் செப்பே வெனமனைச் சேற்றுறழுஞ்
சிரமத்தை யேசயிப் பாரோ பனசைச் செபாதித்தனை
சிரமத்தை மேவா ரெனச்சின்ன மூதத் தெருவருவச்
சிரமத்தை யாரச் சிவாவதா ரன்பெற்ற தேசிகனே (38)

தேசிற் றிகழுஞ் செழுஞ்சீத தாதிணர் தேந்தளத்தா
வீசிற் றிகழுஞ் செயறால நாட்டி னியற்றலையீர்
காசிற் றிகழியிற் கள்ளுண்ணி யாங்கணுங் கத்தாகத்
தாசிற் றிகழுநீ ரேனலை யின்றதென் றார்த்திடலே (39)

திடல்பட்ட சாலி திசைமுட்ட மல்கயச் செய்ப்பனையூர்
மடல்பட்ட பாத மனைவிட்ட ஞானி மதுக்கானிக்
கடல்பட்டகண்ணுடல்பட்டதேவர்கைத்தாளமிட்டோம்
படல்பட்ட மாணொயி லன்னம் புறப்பட்ட தந்தியிலே (40)

ஆந்தியா னந்த மகமக லாதுளூற் றன்புறுவோர்
வந்தியா னந்த மகான்மக வேபனை யூர்வரதன்
ஸிந்தியா னந்த மிதழவி லல்லிக் கினியசொந்தாட்
சந்தியா னந்த முறுதிரு நாளொன்று சாற்றுகவே (41)

சாற்றுஞ் சகல கலாவமு தூண்டோர் சரண்புகுஞ்
சாற்றுஞ் சகல மணிக்கூண் டவந்திக டாரெனமஞ்
சாற்றுஞ் சகலா வணியமாம்புற்றண்டல்வென்வெண்ணூற்
சாற்றுஞ் சசியா மகிழ்வுநீ செய்த ததிசயமே (42)

சயனத்தை யாட்டரி சார்ந்திட்ட சக்கிரி தண்கிரிச்சா
ரயனத்தை யாட்டி யலையால் காட்டி யலர்கழுநீர்க்
கயனத்தை யீட்டிங் கனைகண் ணகன்ற காகநிலைச்
செயனத்தை நின்றால நாடன்றி யெங்குந் தெரிந்திலனே

தெரிந்திடி னூழி செகாதூற லாமெனுஞ் சித்தருட்போற்
பரிந்திடி னூழின் பயமில்லை என்பான் பனைசைவெற்பிற்
றிரிந்திடி னூழிற் றிருநடை மான்கயற் சீறுசெங்கட்
புரிந்திடி னூழியஞ் செய்வாய் நெஞ்சே புகுந்திலமே (44)

புகுந்தா மலகற் றிருந்தா மெனமனம் போங்கொலன்பே
யிருந்தா மலக மெனக்கையிற் காட்டு விபுவகண்டம்
தருந்தா மலகட னீகால் வெழுளிமணுஞ் சர்வமின்றென்
றுகந்தா மலைகையொளியெண்ணையூர்ப்பிரானெண்ணடிக்கே

அடிசிலை யின்றெம தாண்டான் பினையூ ரடிகள்சுயம்
படிசிலை யின்று தலர்தூய்த் தருச்சித் தரகரவென்
றடிசிலை யின்னுரினியா ரெனுமிட் டருள்பெறுமின்
அடிசிலை யின்கர னன்றேறு வான்பொன் னமைத்திடுமே

இடுக்கண் டகர்த்தீண் டிசைதால நாட்டா ரிணைக்கழலுண்
ணடுக்கண் டிருந்த கலிதலன் றேயிந்த நானிலத்திற்
கடுக்கண் கனகக் கணையாழி சங்கிலிக் காழ்களங்கத்
தடுக்கன்னி யாசை யகன்றென் று ளாசை யகலனெஞ்சே

அகத்தா மரையி லரசிருந் தெம்மை யடிமைகொண்ட
மகத்தா மறையர் மணிமாட கூட மலிபனையூர்
நகத்தா மறைத னகத்தகு மங்காய்க ணற்றனத்தும்
பகத்தா மரையாம் பணைத்திலே கையும் படும்படியே (48)

படிக்கும் பலவித பாமாலை சூடிப் பரிந்தகத்தே
கடிக்கும் பனைநகர் நாயக னேமற வேனுனைநான்
மிடிக்குங் கொடிய வியாதியும் பொல்லா வினைக்கிரியும்
பொடிக்கும் புராதன புண்ணிய நீறும் புரிந்தருளே (49)

புரிகம் பரிசி புதுச்சாலி யானும் புனைமணிஞ்சி
புரிகம் பரிசி பொன் னுப்பணி யோலுமின் பூக்கலைச்சூற்
புரிகம் பரிசி புருப்புணர் கம்பம் புலர் பனசைப்
புரிகம் பரிசி வசம்பாயினு னெனுட் பூணண்ணலே (50)

அண்ணத் தணைநாக் கசைகின்ற தன்றி யிதழணுகா
தென்னத் தகதூக் கியற்றுஞ் சிறார்க ளிரண்டண்டைக்
கண்ணத் தரியுங் கதையாடி னெற்றுறுந் தாளிநகர்த்
தண்ணத் தரீன்றநந் தச்சனே சன்று டலைக்கணியே (51)

தாடலை யுள்ள தபோதனர் சற்பிர சங்கமல்கேர்ச்
சாடலை யுள்ளதி ரத்தினஞ் சிந்தும் பனைசைநகத்
தூடலை யுள்ள வுலாக் குயில் தோள்வந் துதகியின்பப்
பாடலை யுள்ளஞ் செவியுங் குளிர்ந்திடப் பாய்ச்சியதே (51)

பாய்ச்சும் பனையூர்ப் பரதேசி யென்றுற் பானயன்மால்
காய்ச்சுங் கனலின் மெழுகா யுருகிமுன் காத்துநிற்பார்
பேய்ச்செம் பலிகொடு வீண்காதை பேசிப் பிதற்றுவெறும்
வாய்ச்சும் பரேவுமக் கென்றுகொல் ஞானம் வருகின்றதே

வருமா துளைக்கு மரம்போல் வளர்ந்து மயானத்திலே
வருமா துளைக்கும் வகையறிந் தும்பனை யூர்மகத்தா
வருமா துளைக்கு மதிதவத் தாய்பெற்ற மைந்த வென்னீர்
வருமா துளைக்கு மழகென்று வாயூறும் வம்பர்களே (54)

என்று னிலத்திய லென்கதி யின்றைக் கிருத்தலடுத்
தின்று நிலையில தெண்ணிநா ளுளா யிழந்தனனென்
றின்று னிலையத் திருந்தறி நெஞ்செற் கியைந்திடினே
தென்று னனையா யிராதயன் கைக்கொரு செய்துயரே(55

செய்யுந் தவமே திரண்டுருண் டார்திருத் தேன்மழையே ா
பெய்யெனப் பெய்யும் பெருமாட்டி பாடலி பிள்ளைவெற்ப
கையுங் கழலு முகமுந் தனமுமா கஞ்சமென்று (ள்
மையுங் கழிவிழிக் கெண்டைக டாவி வளர்கின்றதே (56)

வளர்பாத பங்கய மாவினை தீர வலியவந்தாழ்த்
தளர்பாத கன்றலைமேல்வைத்த காட்சியென் சாற்றறியேன்
களர்பூத நற்கணர் கின்னரார் தும்புரார் கந்தருவர்
விளர் பூதரார்க் குளப் புல்லூர வெங்கும் வியாபகனே (57)

பகவனம் பாடலி னுடலாஞ் சங்கரர் பங்கயவம்
பகவனம் பாடலி நாடலாம் பங்கன் பயந்தநல்ஞா
பகவனம் பாப்புள் ளகவனந் தூறப் பகறடிசண்
பகவனம் பாற்பனை யூர்ப்புகழ் பார்ப்புகள் பாடிடுமே (58)

கள்ளே யயின்ற கருஞ்சிறைச் சட்டாட் கழியளிகா
ளெள்ளே னினிநுங்க ளெச்சிலென் றின்றே னிணரலரைத்
தள்ளே னெனநலஞ் சார்தால நாடன் றலைக்கணிந்தா
ரள்ளே யடிகட் கடைக்கலங் காத்துநீ ரார்ந்ததற்கே (59)

நீர்வா ருழுவய நெய்தலாய் சில்லைக ணெய்விழுக்காய்க்
கார்வா ரிசவளி குங்கல்ய தூபமாய்க் கண்பனையூர்
நீர்வாரு மென்றயர் நித்திரைக் கண்ணும் நெருங்குபெண்மா
னீர்வா ருவாத்தனுந் தாங்கவோர் வாறுண் டிடைசிறிதே

சிறியன் றெரியுஞ் செயலது வோபனை யூர்ச்சிவமா
லெறியென்று கல்லா விடைவீற் றிருந்த யிறைபெயராய்
பொறியன் றரியன்று புத்தேளி ரன்றிப் புவனமன்றாழ்
வெறியன் றொருவரை யன்றென்றே வீசுமுன் விண்ணொளி

விண்ணர சன்மமே வேண்டுவர் தேவரும் வீணினெஞ்சே
விண்ணரம் பேசி வெறுங்கனு வாழ்வை விரும்புகின்றாய்
விண்ணான் பேணுநம் வேதாந்த பாற்கார் மெய்பனையூர்
விண்ணா ணுங்கதி ரெக்காலங் காண விழிப்பதுவே (62)

காரணத் தளிர்த்தாள் கடையேந் தலையிற் கனிந்திருத்தி
யாரணத் தளியா றஜிரகன் றாரகை யாதிநடுங்
கோரணத் தளிகா ருயர்தால நாடன் றஞுற்றறத்தாம்
றானத்தனென்னத் தனிக்கோயில் கொண்டருள் சத்தியனே

சத்தியத் தூக்கந் தளரா தறம்புரி சைவசித்திற்
குத்தியத் தூக்கங் குருவான் பனைசைக் கொடிக்குயின்மாப்
பத்தியத் தூக்கம் பயின்மோ கனக்கிளி பாலடைந்தால்
நித்தியத் தூக்கம் நினையாது பாணநன் னேத்திரமே (64)

திரப்பார் திரையுஞ் சிரப்பொரு ளேபனை யூரசெம்பாத்
திரப்பார்க் கினியாய் திருப்பா டலிபெற்ற செல்வமுற்சாத்
திரப்பார்க் கிதையா சிறியே னடைக்கலஞ் சேர்த்தருள
திரப்பார் பதத்துணைச் செந்தாமரையையென் சென்னியிலே

சென்னிய னெற்றி நிலைநாசி யின்கடைத் தேசமியா
னன்னிய னெற்றிற் கறற்றுகின் றானென் றகலனன்றண்
றின்னிய னெற்றி யெழுந்தே கதிநிழ லீதருசார்
தன்னிய நெற்றிட் டடர்தால நந்தச் சதானந்தனே (66)

நந்தங் கரும்பு நடுபூகம் வாழை நனையலைமுத்
தந்தங் கரும்புற் றரைசூழ் குளப்பனசைச் சைவலச்
சந்தங் கரும்பு குடிச் சந்த்ர பால தருமசிங்க
மந்தங் கரும்பென்றி வம்புலி முன்வைத் தகன்றதென்னே.

என்னை யிதோதெருச் சிற்றிலிட் டாடு மிளமையிலே
தன்னை யிதோபதே சத்தாற் றரிசியென் சாதழகன் (யூர்க்
பின்னை யிதோபொரு ளென்றுலாய்ப் பெய்யும் பெரும்பனை
கென்னை யிதோகதி வாவென்று கூப்பிட் டிசைப்பதுவே.

வாவென்று மின்னு மழைசான் றருளை வருடிநற்செல்
வாவென்று மின்னும் வரவயி ராணி வருந்திகின்ற
வாவென்று மின்னு மகிழ்தாரு மென்பனை யூர்வரதா
வாவென்று மின்னும் வராதும்மை யாமுற்ற வாஞ்சையிலே

சையிலை என்னை சதாநினைக் கின்றனை சர்ச்சனர் லெச்
சையிலை யேலென் றனரேகை கையிற் றளையினெஞ்சே
சையிலை நொச்சித் தளநீர்ச் சடையுடைச் சந்திரர்செச்
சையிலை யுந்துணைத் தோட்டால நாடனைச் சார்குதியே(70)

குதிக்குங் குரங்குக டேம்பலா வித்துஞ் சுளைகுவியக்
கதிக்குங் கரேணு கழிவனப் புல்லைநங் கத்தர்வெற்பிற்
கொதிக்குங் குளிர்மதி தீயதாந் தென்றல்பாம் பாகுமுந்நீ
ருதிக்கும் பராமுலைக் கோர்காட் கணவ னொளிந்திடினே

ஒளிருஞ் செழுந் தமிழ்ப் பாமாலை நெஞ்சே வுஞற்றுதிவான்
வெளிருஞ் சாடவி விண்டா ரலரிக்கிழை வேர்ப்பமணந்
தளிருஞ் சிருர்முகத் தாமரை யென்னமா தங்கமெட்டும்
பிளிரும் படிக்கடர் பேர்ப்பனை யூரெம் பிரபுவுக்கே (72)

பிரமன் பிறங்கு மலர்நாபி நாமப் பிறைநுதற்சம்
பிரமன் பிறங்கற் பெருமான் பதாரமே பேணியில்லாம்
பிரமன் றுதித்தாய் பெருவாழ்வி னூர்பெற்ற பேரொளிசுப்
பிரமண்ய ராணூர் பனையூர்க்குஞ் சேமம் பிறந்ததுவே (73)

ததுதந் ததுதணி யாத்தனத் தத்தையர் சர்க்கரைச்சொற்
றதிதந் துதிதிதி ததியிதென் றெத்தித் தனத்தைநத்தி
யதிதந் திரத்தி லதிதியாத் தாழ்த்தா தகத்தினித்தக்
கதிதந் திடுஞ்சித்த னைத்தால நத்தனைக் காணிநெஞ்சே

காணிக்கை யோவென் றழகா விரதியுங் காதலுறும்
பேணிக்கை யாளர் பெருகுநந் தாலா புரிப்பிறங்கற்
பூணிக்கை மேலுடன் பட்டாற் பலன்படப் பூத்தகொம்பே
நாணிக்கையாற்றனம் பொத்தாது கண்பொத்து ஞாயமென்

ஞாயிறு திங்களாய் மாறினும் பொங்கும் கடுக்கடலுட் (னே
போயிறு ஞாலம் புரண்டே யிருண்டு பொடிபடினும்
பாயுறு நோய்க்குழாம் பாய்த்தே குளப்பினும் பாற்பசுமேய்
வாயுறு தென்பனை யூராவுன் பாத மறக்கிலனே (76)

பாதத்தை யோதும் பவிசுவந் தாலிந்தப் பாரைவிரும்
பாதத்தை மீறிப் பரவுமுன் சோதி பலித்திடுமே
பாதத்தை மைனுப் பரபுட்ட மேசும் பசும்பொழில்வான்
பாதத்தை நீத்த பனையூர்ப் பராமண பாக்கியனே (76)

நீத்தா யனைத்தை நினைகா ரியத்தென நீதனியாய்த்
தாத்தா யெனத்தா னடிக்கின்ற தேனெங்கள் சந்ததியுந்
தாத்தா யெனத்தகுஞ் சற்குரு நாதசற் சாதுகளைக் காத்தா
காத்தா ளடிசிற் கதிதால நாட்டுக் கதீந்திரனே (78)

இந்த ரனேவென் றயிராணி பேர்ப்பார்த் திழிந்துவெட்டுஞ்
சுந்தர மள்ளர் தொழிப்போம் பனையூர்ச் சுரர்சயிலச்
சந்திர வாணுதல் சென்றதி ரேவத் தருங்கொலவ்வாய்
கந்தாங் காற்றிற் கலந்தோடல் கண்டுங் கவலைகொண்டே

கவலையி னாற்கலக் கண்ணீர் வடித்துனைக் காணவென்னுஞ்
சவலையை யாட்கொளத் தாமத மேனொரு தன்மையில்லா
தவலை நினைத்து துரலையிடித்தாங் கழிவளக்கோ
துவலையின் கூகைகள் பாரா தொளிர்பனை யூர்ப்பகலே (80)

பகலன் றிரவன்று வெள்ளியிக் தக்கினி பார்விணங்காற்
பகலன் றுருத்தரன் றிந்திரர் தேவரெப் பாவனைவம்
பகலன்று கொல்லோ பரப்பிர மோதியென் பத்தருள்விம்
பகலன் பனையூர்ப் பரிபூ ரணன்புகழ் பாடுவண்டே (81)

அத்தனை யென்னை யறியாச் சிறுறி லனுகிநல்ல
தத்தனை யுந்தந் தடியா னெனச்சேர்த் தனைத்துநின்றாள்
சித்தனை ஞானத் திருசங்க ரேசுரர் சேயனைநன்
நித்தனைக் காண நிதந்தால நாடுசென் நீகுயிலே (82)

குயின்றடி யார்தொழக் கோருவ நேரீ குருமுருகிக்
கயின்றடர் மாலையணியண்ண லார்பனை யூரசல
வயின்றதும் போதி மடமான் முகவலங் காரமின்னப்
பயின்றதும் நின்றதும் பார்த்ததுமாறுமோபைங்கண்ணிலே

கண்ணுங் கருத்துங் கலைமீதிருத்திக் கடையுணர்வா
ரெண்ணுங் கருணை யிரட்சகனேமெய் யிறக்குமுன் நற்
பண்ணுங் கருமம் பலநோற் றுனதுபொற் பாதபத்மம்
நண்ணுங் கதியை நவில்வாய் பனையூரி னாயகனே (84)

நாயகனே சிவ ஞானநு பூதியின் ஞாபகஞ்சொன்
நாயக னேமியொன் றில்லாய் பனைசைய நஞ்சையுண்டோ
னாயக னேதுவ னுதன் பிதாசுரர் நன்கிருக்க
நாயகனேதிரு சிறந்தா னெனவந்து நட்டனையே (85)

நட்டத் தகன்ற நறுந்தே னிணர்க்கிரி நாங்களள்ளிக்
கொட்டத் தகாதா சேயென் றலாட்கணங் கூச்சலிடுந்
திட்டைத் தலையாய் தனிருத்தி ராக்கந் தரித்தொருகை
நெட்டுத் துணியிடை கட்டியுட் கார்ந்த நிசானந்தனை (86)

ஆனந்த மானந்த மென்றல கேழு மதிசயிக்கத்
தானந்த மாத்துயில் சாப்பாடும் நீத்தருள் சாதுவெற்பில்
மானந்த மானவள் மஞ்சளும் பூத்த மணவதனத்
தேனந் தரக்குந் தெவிட்டா தெமக்கோ தெவிட்டிடுமே (87)

விட்டுவிட் டெண்ணும் விழற்பொறி யேஒரு வேளையும்நீ
கட்டுவிட் டாதிக் கதிதுய்ப்ப யோமனக் கண்டிரந்து
பட்டுபட் டென்றடர் பாசா டவியறப் பாய்ந்துவெட்டிச்
சுட்டுவிட் டென்குரு நாதனூர் தூக்குஞ் சுகக்கடலே (88)

சுகமே வடிவாய்த் துரியாதீ தத்திலே தோய்ந்திடுமஞ்
சுகமே வடிவாய்த் துலங்கினுந் தோணு துவக்கெனக்கிஞ்
சுகமே வடிவாய் சுறப்பவந் தோதிய சோதியருர்
சுகமே வடிவாய்ச் சகியென்பர் வாழ்புனஞ் சூழ்புல்லையே

சூழ்ச்சியோ நெஞ்சே சுடுகாட் டுடலெலாந் தூளுறலுங்
கீழ்ச்சிறை யெய்தலுங் கண்டுகொண் டாயினங் கேளோர
கிழ்ச்சிக ரல்குற் றிழிந்தே செனித்தலைச் சீறியென்றுந்(ன்னை
தாழ்ச்சியில் லாதநந் தாலாத் தலத்தனைச் சாற்றுதியே (90)

சாற்றும் புலவர் தனிநாப்ப ணூரத் தரித்தபொற்றோ
ளேற்றும் பனையூ ரிருவினை தீர்த்தா ளிளர்நகக்கண் (ங்)
டோற்றும் புனைமணித் தொங்கலால் கொங்கை துளிர்தளிர
காற்றும் பொருக்கழ லெவ்வாறு போய்வருங் கானகத்தே

கானகந் தங்கச்சடைதாடி. வைத்திடைக் காவிக்கட்டிக்
கானகந் தங்கிற் கதிவரு மோமனக் கண்விழித்தா
மானகந் தங்கு மகதேவ னன்றருண் மந்திரத்தைத்
தானகந் தங்கத் தரிபனை யூரான் றயவின்றியே (92)

தயங்காத் தனிப்பெருஞ் சாயுட்ச்ய மோட்சத் தனிவெளிமீ
தயங்காந்த மென்னகம் மான்மா மனதுமா ரோகணம்பந்
தயங்காட்டி நாட்டத் தகுங்கட் பிரான்பனை யூர்த்தலரி
தயங்காத்த சற்குண சந்யாசி பாதந் தலைக்கொண்மினே (93

தலையா னனத்தனஞ் சங்கர ஞாணி தார்க்ககனேர்
தலையா னனத்தனஞ் சங்கர ஞாணிச் சந்திரனேர்
தலையா னனத்தனஞ் சங்கர ஞாணி சாரிடன்கு
தலையா னனத்தனஞ் சங்கர ஞாணித் தாலையனே. (94

தாலையின் மந்தி தருத்தாவத் தேன்மழை தானெனமொய்த்
தாலையின் கள்ளுண் டமரே புரிந்தா டடிகள்வெற்பிற்
சோலையின் போதுஞ் சுடுமென்றறற்றுமிச் சுந்தரிக்கு
மாலையின் போது வருசோப நோய்க்கோர் மருந்தில்லையே.

மருந்தென்றும் வேண்டா மனமே பனையூர் மகாமினனீ
இருந்தொன் றிரண்டினை யேற்றிவெண் ணீறுதன்னீரினைவீ
திருந்தொன் றிசைவினை யேதுமோ யேதுபே யேதிருளே
தெருந்தொன்று ஞாலத் திடுக்கே தெரியே தெகிர்யகையே

தெரிவையோ வன்மித் திரிவையோ நெஞ்சே திரிபுரமுந்
தெரிவையோ மாக்கா தேவன சங்கா ரீன்றசெல்வர்
தெரிவையோ தொட்டுந் தெரியாத ஞானி சிநேகமில்லா
தெரிவையோ தேட மனிதராய் நாமிங்கு செனமித்ததே.

இங்கங் கெனத்தா னடியா ரலைபா தெளிதருளத்
தங்கங் கதிக்க தளத்தா ளெடுத்தாடு சங்கர்நீற்
றங்கங் குளிர்ந்தோ தழகாஞ் சுதாா யகிலருய்யச்
சங்கங் கழனி தருந்தால நாட்டிற் றழைத்தனரே. (93)

தழைக்குஞ் சிவாகமந் தக்கநி யாயமுஞ் சாற்றடியார்
திழைக்குஞ் சிவேகச் செயலெய்தி னன்பனை யூர்ச்சிகரத்
திழைக்குஞ் சிறிய யிடையாளின் காந்த ளிதழுமுத்துக்
குழைக்கும்பொருகழுநீர்க்கண் ணும்நெஞ்சையுட்கொண்டதுவே

கொண்டலை மல்குங் கொடியுடைக் கோயிலின்கோபுரஞ்சூழ்
தண்டலை மிக்க பனையூர்க் குருமணி தாசருக்கு
விண்டலை செல்வி திருமா துதவுவள் வேண்டுவதேன்
மொண்டலைபூங்கழன்முப்போதும்வந்துகண்முன்னிற்குமே.

ஓம் ஸ்ரீ குருவே நம:

பனைசை அந்தாதி முற்றுப்பெற்றது.

---

வாழி விருத்தம்.

உம்பலா னனத்தன்வாழி வுமைசிவன் குமரன்வாழி
தம்பிரான் பொதிகைநாதன் சங்கரப் பெரியோன்வாழி
அம்பிசூழ் பனையூரெங்க ளாண்டவ ரென்றும் வாழி
உம்பரெம் பிதிரோர் வாழி வுலகுயிரனைத்தும் வாழி.

சுபம்! சுபம்! சுபம்!

---

ஓம் ஸ்ரீகுருவே நம:

# ஸ்ரீ சநீசுரர் சதகம்.

---

## காப்பு.

கொச்சகம்

பூமாலை சூடும் புகழ்க்காக வாகனர்க்கோர்
பாமாலை பாடிப் பரவிகவின் பெய்திடவே
ஆமாலைக் கோமாளி யாக்கிமுன மாட்டிவைத்த
சேமானைக் கன்றையெங்கள் சேவகனைப்போற்றுவனே

## நூல்

ஆதிபரஞ் சோதி யகண்டபரி பூரணமா
நீதிநிறை சிவனே நிர்த்தனமன் ருடியதும்
பாதியுடலொருபெண் பாலீந்த கோலமுமுன்
சூதி னிகழ்ந்ததன்றோ சொல்லாய் சநீசுரனே (1)

பிறப் பிறப்பு மில்லாத பெம்மான் சடைவிரித்தே
பறப்பும் பசும்புனலும் பாலநிலாத் திங்களதும்
கறப்பி லராவுமொரு கன்னிகையுந் தான்சுமக்கச்
சிறப்பென் றிசைத்தாரார் செப்பீர் சநீசுரனே (2)

குற்ற மென்ப தில்லாக் குணம்படைத்த எம்பெருமான்
பற்றனலை ஏந்திப் பரதேசி போற்றனியாய்
ஒற்றைத் துணியுமில்லா தோடெடுத்து வேஞ்சுடலை
சுற்றவைத்த தாரெனக்கே சொல்லாய் சநீசுரனே (3)

தாயுந் தகப்பனிலாச் சன்யாசி தானளித்த
சேயின் பதந்தொழுவே செய்தோர் சடாமுனியாற்
போயன் றொளிந்தும் புலித்தோலைப் போர்த்திருக்க
நீயன்றோ செய்தாய் நிசமாச் சநீசுரனே (4)

சுத்தனை மத்தனெனுந் தோடார் குழைச் சிவனைப்
பித்தனென வித்தரையோர் பேசவைத்த தல்லாமல்
அத்தியுரித் தத்திதரித் தத்தமுறத் தம்பலத்தே
மெத்தவிதித் திட்டவரார் விள்ளாய் சநீசுரனே (5)

மூக்கண் படைத்த முதுஞானக் கற்பகத்தைத்
தக்கன் சதிசெயமுன் றக்கவழி செய்ததல்லான்
மக்களையும் வேண்டி வணங்கவோ வன்னார் தேர்ச்
சக்கரத்தைத் தூளாய்ச் சமைத்தாய் சநீசுரனே (6)

தன்னிகரே காணாத் தருமதுரை யாண்டவனைத்
தன்மனையா ளோடு சபைநடுவி லாட்டவைத்தும்
பன்னுமதி மண்சுமந்தும் பாண்டியனார் பொற்பிரம்பா
லுன்னு மடிபடவே னுற்றீர் சநீசுரனே (7)

தவத்தோ ருளத்துஞ் சயனஞ்செ யெந்தேவைக்
குவித்தசெங்கல்லாலோர் கோவன் றெறிந்திடவும்
பவத்தழுந்தா வேடனொரு பாதுகையி னுன்மிதிக்க
சிவத்தன்வில் வீசவு மேன் செய்தாய் சநீசுரனே (8)

பக்தவிக ளுள்ளும் பரமகரு ணாநிதிமுன்
கக்குமொரு வேடன் கனிஎச்சி லுண்டதுவும்
புக்குமதிமன்மதனாற் போதநிலை போயவனே
செக்க ணெரிக்கவுமார் செய்தார் சநீசுரனே (9)

வள்ளலெனுஞ் சைவ வடிவாள ரோரடியார்
பிள்ளைக்கறியினுக்கே போராசைப் பட்டதுவும்
உள்ளுமோ ரப்ப ருடலையுயி ரோடயின்றும்
வெள்ளைமா டேறவுமார் விட்டார் சனீசுரனே (10)

மாமுகுந்த னென்னு மணிமாலை யிவ்வுலகோர்
காமுக னென்னக் கழறவவர் மாதர்களை
ஏமுறவே தேடியழ கேந்திழையார் மத்தடிபட்
டாமுறவிற் கட்டுண்டா ராமென் சனீசுரனே (11)

வெண்ணை திருடியென வேணிசையான் பேரொடுத்தே
கண்ணை யகழ்ந்தரைர் காலடியி லெய்ததுவும்
பெண்ணைச் சுடலையிலே பேசிப் புரண்டழுது
மண்ணைத் துளைக்கவுமார் வைத்தார் சனீசுரனே (12)

மாமாது தோழன் மலைமாடு மேய்த்ததுவும்
தாமா யொருவரையே தாங்கிமிக நின்றதுவும்
கோமாளி யாகியொரு குஞ்சரமுன் பாடியதும்
சாமான்யமாவுனது சத்தி சனீசுரனே (13)

கோவென்ற வைவர் குடிக்கேவல் செய்தனைமுன்
பாவென்றுலகளைத்து மண்ணுக்கி லேகாட்டித்
தேவன் சலந்திரனுற் சிந்தைபயந் தோடி வெண்மே
ரோவென்று ராமரியே ஞேதாய் சனீசுரனே (14)

மாசிலா ராமர் வனவாசஞ் செய்ததுவும்
பேசுமிளஞ்சீதை பிரிவாற் பிதற்றியதும்
கூசுங்குரங்கினமா கும்பனடுக் கொண்டதுந்தன்
தேசமறந்ததுமுன் செய்கை சனீசுரனே (15)

தசரதனை மாய்க்கத் தனிப்பரதன் தாய்செயலும்
விசயரெனும் பாண்டவரை வெங்கான் விரட்டியதும்
நிசமாமனுமான்வா னீண்டுதீப் பற்றியதும்
பிசகிலங்கை சுட்டதுமேன்பேசுஞ் சனீசனே (16)

வாசத் துளபனன்றுண்மத்தாளங் கொட்டியதும்
பேசத்தன் வாகனமாய்ப் பெண்ணாகி நின்றதுவும்.
பாசத்தி ருக்மணியாற்பாமாவுட் டன்பெருமை
வீசத்திரிந்ததுமேன் விள்ளாய் சனீசுரனே (17)

மாலையுல கெல்லா மறைந்திருந்து பாவமந்த
வாலியையேன் கொன்றார் வதிந்தென் றுலகேச
வேலையிலே சேடன் மிசைதுஞ்சி மீண்டுமிப்பூ
லீலையை யென்கெல்லோ நினைத்தார் சனீசுரனே (18)

சந்தத் திருவணங்குந் தான்வணங்குந் தண்ணளியா
னுந்தியிலோர் பாலனுதித்துலகஞ் செய்ததுமா
தந்தையன் மன்மதனைத் தான்சாகத் தந்ததுவும்
உந்தன் மகிமையன்றோ ஓதாய் சனீசுரனே (19)

உள்ளமுருக்கு மொருதிருமா லுந்திவந்த
பிள்ளைசபதமிட்டுப் போர்வான் பறந்ததுவும்
வள்ளமுலை யாய வனம்போ யலைந்ததுமுன்
தெள்ளுந் திறமையன்றோ தேவா சனீசுரனே (20)

எம்பெருமான் கந்த னிறைபால நோக்குதித்தே
அம்பியிலா வாவென் றழுதுபசி கொண்டறவர்
கும்பமுலைப் பாலுங் குமரிதரு பாலுமுண்டாங்
கம்பிகையா லாறுரு வொன் றாக்குஞ் சனீசுரனே (21)

சேயவரா மெங்கோன் றிரள்சே ரசுருடன்
போயரும்போ ராற்றிப் புனிதவே லாயுதத்தா
லாயவரு சேவன்மயி லாங்குகொடி வாகனமாய்
நீயறிந்து செய்ததன்றோ நேரோ சநீசுரனே (22)

தேவேந் திரனைற் றிருந்துமயி ராவதத்தான்
மாவேந்தர் போற்ற வளர்த்தபசும் பூங்கொடியை
ஈவே னெனவலியை எந்தைசேய்க் கீண்டளிக்க
நீவேலை செய்ததன்றோ நீலா சநீசுரனே (23)

நாரதர்சொற் கேட்டு நமதுகுரு வாம்பிரம
வீரமுரு கேசன் வியந்துபுன மேபுகுந்து
பாரமா மாகியுவாப் பண்பினன் வள்ளிதனைச்
சேர விசைத்தமகா தீரா சநீசுரனே (24)

மயிலேறி யிப்புவியை மாவடிவேல் சுற்றியதும்
பயிலீச னங்கைப் பழம் பற்று துக்கியதும்
சயிலமே னின்றதுவும் தன்றகப்பன் சாமியென்றே
மயலுலகஞ் சொல்லவுமார் வைத்தார் சநீசுரனே (25)

ஆதி விநாயகர்க்கோ ரானைமுக மெய்தியதோ
டோதகிலோர் கொம்பன்றொடிந்துபோய்விட்டதுவும்
காதலுறு வல்லபையின் கண்கருப்பை யாய்ந்தவரொன்
றோதவுமார் செய்தாரொருதாட் சநீசுரனே (26)

கூறுங் கணேசன் குளக்கரைகள் கோயில்கள்முன்
னேறு மரசடிமற் றேகிடுமுச் சந்தியிலும்
ஊறும் பெருவயிரோ டுட்கார்ந்த வாறிருக்குந்
தாறுமா றார்புரிந்தார் சாற்றுஞ் சநீசுரனே (27)

முப்பழம்பா லன்ன முருக்குவடை மோதகமு
மெப்போது முண்பா ரிவரேசப் பாணியென்றே
இப்பாரு மோதக விலகுபெருச் சாளியிலே
றப்பா வெனவிதித்த தாரோ சநீசுரனே (28)

அன்றிந் திரனுமே ளுயிரங்கண் பெற்றதவுந்
துன்றுதுவட் டாசுரனுற் றாங்கமலம் புக்கியதும்
சென்றுமுக்ர பாண்டியராற் சிறைமவ மானமுற்று
மொன்றசுரர்க் கஞ்சவுமா ருற்றார் சநீசுரனே (29)

பூவாரயனீறு பூசுசிர சஞ்சிவொன்றைச்
சிவாதியீசன் சினந்துகிள்ளிக் கொண்டதவுந்
தேவாதிசேயாற் சிறையிலடித் திட்டதுவும்
நீவாதியான நிகழ்ச்சி சநீசுரனே (30)

ஆகுஞ்சிவனேயென் னப்பனெனு மப்பனைமுன்
வேகுதழனீறுள் வெறியானை யின்கழலுள்
ளாக முநிவு மலைகடலிற் கற்கிடந்துஞ்
சோக முறவும்வைத்த சூதேன் சநீசுரனே (31)

மாணிக்க வாசகரா மாஞானி கோயில்கட்டப்
பேணிப்பா ராதரசன் பேர்கற் சுமக்கவைத்து
மூணிச் சிறையிலடைத்தொன்னலர்போற்கோபமுறப்
பாணித்ததாருரையும் பண்பாய்ச் சநீசுரனே (32)

சுந்தர மூர்த்தியெனுந் தூயோன் பறவையின்பாற்
சிந்தைமிகுந்துஞ் சிவனைத்தூ தேவியதா
யிந்த உலகோ ரியம்பவுமன் னூர்விழிக
ணந்தி யுடன் வந்திடவார் கட்டார் சநீசுரனே (33)

சம்பந்த சாமி தனியூருணிக்கரைமே
லம்பிகைபா லுண்டுதந்தை யாலஞ்சிச் சொன்னதுவும்
வம்பிற் சமணரை வன்கழுவி லேற்றியதா
யம்புவியிற் பேசவும்மைப் பாரார் சநீசுரனே (34)

ஓர்சொலரிச் சந்திரனு ரோங்குநகர் நாடிழுந்தும்
பேர்சொல்லும் பிள்ளையொடுபெண்டுதனைவிற்றதுவுஞ்
சீர்செல்வ னும்பறையன் சேர்சுடலை காத்ததுவு
மார்சொல்லா ருன்செயலென் றையா சநீசுரனே (35)

அன்றுநள ராச னரியுதம யந்தியொடு
சென்றுவனத்திடைபின் சீயென்றவளைவிட்டு
மொன்றுபரி சாரகனு யுண்மையுரு மாறியது
முன்றன் பெருமையன்றோ ஓதுஞ் சநீசுரனே (36)

மின்னுநா காத்திரத்தை வேணதவஞ் செய்து பெற்ற
மன்னவனுங் கன்னன் மணித்தேரில் மூர்ச்சையுற
வுன்னு மவன்றரும மோடோடி மால்வாங்கப்
பின்னிவைத்த தாரறியப் பேசுஞ் சநீசுரனே (37)

மிக்க குணம் படைத்த வேந்து துரியோதனனை
தக்க சகுனி சதிவா சகங்கேட்டுப்
புக்குவரு மைவரையும் போருக் கழைத்திரந்தா
னிக்கதைக்குக் காரணரா ரேசாய் சநீசுரனே (38)

பத்துத் தலைபடைத்துப் பாராண்ட ராவணனு
ரித்தரையின் மூயென் றியம்பழுகி சீதைதனை
அந்த ரதத்திலெடுத் தன்றேகி ராமரம்பாற்
செத்தழிந்தா னீதுன் செயலே சநீசுரனே (39)

மார்க்கண்ட ராலே மறலிபட்ட பாடதுவும்
பார்க்குட். சூர்பானு கோபனுக்கு ளஞ்சியதும்
வேர்க்குமதி வைரவரால் வேதனறு பட்டதுவும்
பார்க்குங்கா ணிவிளைத்த பாதை சநீசுரனே (40)

அகலிகைதான் கௌதமரா லாங்குசிலை யானதுவும்
புகலுமொரு பத்தினியாற் போதுவிடி யாததுவும்
பகலவனுக் கக்காலம் பல்லுதிர்ந்து போனதுவும்
மகலநிலாத் தேய்ந்ததுமுன் ஆக்ஞை சநீசுரனே (41)

சுக்ரீபன் வாலியெனுந் தூய சகோதரருண்
மிக்க பகைவிளைந்து வெம்போர் தொடுத்ததுவு
முக்கியளாஞ் சூர்ப்பனகை மூக்குமுலை யாய்வுறலுஞ்
சிக்கன நீயன்றித் திகழா சநீசுரனே (42)

மாவசிட்ட ரெக்கியத்தோர் மாதுநீர் பெய்ததுவும்
பாவகுணத் தாடகையோர் பாலகனால் மாண்டதுவு
மாவிசுவா மித்ரர் வசிட்டர் சபதமுமூ
தேவிமண வாளரவுன் செய்கை சநீசுரனே (43)

கும்பமுனி சொம்பதலே கொண்டுவந்த கங்கையைமா
வெம்பெருமான் காகமதா யேறிக் கவிழ்த்ததுவு
மம்பிகையின் நன்மணங்கண் டாராது தென்மலைசார்
கொம்பலமேன் செய்தாய் நுவலுஞ் சநீசுரனே (44)

வீரா யிரணியன்முன் மேன்மையுறப் பெற்றமகன்
நேராய் விரோதம் நிகழ்த்தியதி யல்லலுற்றும்
வாரார் பிதாவை வருந்தநர சிங்கரைக்கண்
டாராதழப்புரித்த தாரே சநீசுரனே (45)

லோகத் திரிபுரத்தார் நொந்துமுனம் வெந்ததுவு
பாகத்தி னற்புகரோ னன்றுவிழி யற்றதுவும்
வாகுற்ற சேடனுடல் மத்திலறை பட்டதுவும
யூகத்தின் மிக்காயுன் னோர்வே சநீசுரனே (46)

தேவாசுரர்களுஞ் சேர்ந்து கடைந்தமுதம்
பாவமசு ரோர்க்குப் பலிக்காமற் போனதுவும்
ஆவலொடுநஞ்சை யரனோடி யுண்ணவுமைப்
பூவைகளந் தொட்டதுமுன் பூட்டே சநீசுரனே (47)

சந்திரனைச் சூரியனைச் சார்ந்தரவ முண்டதுவு
மிந்திரனார் வாகனமுன் மீண்டுசிறைப் பட்டதுவு
மந்தாருஞ் சூரருமோ ரன்னைவயிற் றிற்பிறந்து
முந்துபகை கொண்டதுமுன் மூட்டே சநீசுரனே (48)

மாலைவிரட்டிவந்த மாசலந்தி ரன்சிவன்முன்
காலினாற் செய்த கனத்திகிரியால் மடிந்தும்
நீலநிற னார்தலையோர் நேரம்வில் லாலறுந்துந்
தாலம் புரளவைத்த தாரே சநீசுரனே (49)

மன்னிரதி தன்நாதன் மாண்டதெண்ணி நொந்ததுவுந்
துன்னுஞ்சா வித்திரியின் றோழனுயிர்க் கோடியதும்
பொன்னுந்த னன்பர்தலை போனதெண்ணி வாடியது
மின்னுந் தெரியோமோ வேசுஞ் சநீசுரனே (50)

வயிரவராற் றக்கனயன் மாலமர ரஞ்சியதும்
பயில்வாணி மூக்கினிலே பாதியறு பட்டதுவு
மயலா விநாயகர்க்கோ ரானைமுகம் வந்ததுவு
மொயிலாயுன் கூத்தென் றுரைப்பேன் சநீசுரனே (51)

அறமுனிவர் பெண்டீ ருங்கற் பழிந்ததுவுந்
துருவரன்னை தந்தையிகந் தோன்றத் துறந்ததுவு
மருமைச் சுகர்பிறந்த வன்றேகா ணேடியது
மொருமையாய் நீபுரிந்த யுத்தி சநீசுரனே (52)

சாரங்க தன்காத்தைத் தான்றரிக்கச் செய்ததுமோர்
வீரத் துரோபதையின் மேற்றுகிலு ரிந்ததுவும்
கோரக் கடலைக் குறுமுனியுண் டேற்றியதும்
நேரத்தி னீபுரிந்த நேர்மை சநீசுரனே (53)

நாரதரைப் பெண்ணாக்கி ராசனிடம் விட்டதுவிம்
கூருளாய் நந்தியிரு கொம்புமொடி பட்டதுவுஞ்
சாரமறை யோனைத் தசரதன்முன் கொன்றதுவும்
பாரதைப்பாம் பேந்தலுமுன் பண்பே சநீசுரனே (54)

ராகுவுட லற்றதுவும் நற்கேது வுந்தலைபோ
யாக மனிதவென வன்னு ளமைந்ததுவு
மோக மொடுமடவார் முக்கணர்பின் சென்றதுவுங்
காக மதிலுரையுன் காட்சி சநீசுரனே (55)

கற்பிற் சிறந்தகுணக் கன்னியர்க்குப் புத்தியில்லா
மற்கடக மன்ன மடையர்தமைச் சேர்ப்பதுவும்
கற்றபெரி யோர்க்குக் கழுதைநிகர் லண்டியரை
எற்றினுக்கோ கூட்டிவைப்ப தேசுஞ் சநீசுரனே (56)

அன்பில்லா மூடர்க் கருந்ததிநேர் பெண்ணீந்தும்
வம்பியரைச் சர்ச்சனர்கே வகுப்ப தனைக்கழுகோ
முன்பிருந்து நீதான் முடித்தா லெதுமுடியா
தூன்றிறமை யாமோத வொண்ணு சநீசுரனே (57)

மோட்ச வுபேட்சையுள மூத்தரிட மாதுவெனுங்
காட்சிகளைக் காட்டிக் கலக்கமுறச் செய்வதுவும்
தீட்சண்ய மின்மையினார் றேமொளியைத் தேடுவர்க்கோ
மாட்சி மட வார்வருக்காவும்பேன் சநீசுரனே (58)

நிரையப் புசித்தவர்க்கே நேரும் பலவுணவும்
குறையப் பசித்தோர்க்கே கூழுங் கிடைக்கவில்லை
தரையதனிற் செல்வருக்கே தான்மகிழப் பிள்ளைதாரய்
வரியவர்க்கு மக்கள்பல வைத்தாய் சநீசுரனே (59)

வாலநல மங்கையரை வன்குரங்கு போற்கொடிய
சீல மிலா மூட சிகாமணிகள் சேர்வதுவும்
ஞாலமிசை நல்லோரோர் நாணுடிற் பொல்லாநோய்
நீலிகளுங் கெய்துவதென் நீதி சநீசுரனே (60)

பூரணமா லோபிகட்குப் பொன்பொருளுந் தந்துவைத்தாய்
காருண்யர்க் குள்ளக் கவலை மிடி துன்பிழைத்தாய்
ஆரணம்பா ரார்பேச் சவைக்கேறவுங் கவிஞோர்
சீரணிசொற் செல்லாதுஞ் செய்தாய் சநீசுரனே (61)

புல்லரிடை நல்லோர் புகுந்துதலை நாணவைத்தாய்
வல்லவரைக்கோழைகளின் வாயிலஞ்சிநிற்கவைத்தாய்
அல்லல் மிடியடியார்க் கள்ளியள்ளி நீகொடுத்தாய்
நல்லதிது வோவுனக்கு ஞானி சநீசுரனே (62)

நிட்டையிலே மெய்மறந்து நிர்விகற்ப முற்றிருந்த
பட்டினத்துச் சாமிகட்குப் பாய்ந்தகழு மூண்டதுவும்
அட்டியிலாக்கள்வனென வாங்கழைத்தமன்னவன்பின்
சிட்டாய் நின்றதுமார் செய்தார் சநீசுரனே 63)

மங்கலமா வள்ளுவனார் வாய்மைத் திருக்குறளைச்
சங்கத்தார் போற்றித் தனியிருப்பன் நீயாதாற்
பொங்கும் பலகை புலவர்களைப் பொய்கையிலே
மூங்க விடுத்ததுமுன் மூர்க்கஞ் சனீசுரனே (64)

அரிசிவனு மொன்றன் றறியாது தாய்தகப்பன்
தெரியா துதித்தவர்போற் றேசத்திலே சிலபேர்
பெரியாரை வேடமதாற் பேதமையா நிந்தைசெய்தே
கரியாகிப் போவதுமுன் காட்சி சனீசுரனே (65)

ஆடம் பரத்தா லடியார் பெருமையெண்ணா
திடழிந்து போவார்க் கிருப்பாய்நீ சன்மமதில்
ஆடல்புரி யீச னடியிணைகைக் கொள்வார்க்கு
நீடலையா தொன்பதினீ நிற்பாய் சனீசுரனே (66)

சந்திரன்முன் பின்னுந் தனித்துநீ வந்துவிட்டா
லெந்தவித முன்கருணை யில்லாம லுய்வாரே
சந்தமுறு மட்டமத்திற் றனீ யிருந்தாலுஞ்
சிந்தைகுளிர்ந்தானலந்தான் செய்வாய்சனீசுரனே (67)

இரண்டிலே நீவந் திருந்தா லரசேனு
மரண்டலரு மென்றுலிங் காரஞ்ச மாட்டாரே
திரண்ட புயத்தழகா தேர்ந்தமுது மாதுமன்னை
உருண்ட பரிதிபெற்ற வோற்காற் சனீசுரனே (68)

நீயே எதிர்த்தாலின் னிணிலத்தில் யார்பொறுப்பார்
தூயே வினையினரைத் துன்புறுத்த வல்லானே
தீயே யனைதுயர் சேயே னினிச்சகியேன்
வாயே திரந்துவரந் தாருஞ் சனீசுரனே (69)

ஈசன்முதல் ராசர்வரை யேற்றபல பாடுவெண்ணிற்
பேசத்தரமலவிப் பேதையடி யேனாற்றேன்
நீசற் றிரங்கியிந்த நீணிலத்தி லுய்யுவண்ணம்
மாசற்ற வாக்கருளுமன்னா சநீசுரனே (70)

ஆனைபுரி வேலை யயருமெலி செய்திடுமோ
வானைமுடித்தேவர் மகாசூரர் பட்டதுயர்
மீனைத்தொடவு மிரளேழையோ சகிக்கும்
தேனைப் பழித்தமொழித் தேவா சநீசுரனே (71)

புலியே பசித்தாலும் புல்லுண்ண வெண்ணிடுமோ
வலியனா முன்போல்வார் மாட்டெதிர்க்கிற் கீர்த்தியுண்டாங்
கலிகால வஞ்சகர்க்குக் கட்டுண்ட வேழைகண்மேற்
சலுகைநீ காட்டத் தகாது சநீசுரனே (72)

அடிக்கடியே கெஞ்சு மகதிகளைத் துன்புறுத்தன்
முடிக்கு முடிதரித்த மூர்த்தி யுனக்கழகோ
படிக்குட் பணிந்துவரும் பாலருள மின்பமுற
நடிக்கு மொருபாத நாதா சநீசுரனே (73)

ஈசனுக்கு மஞ்சா ரெமனார் தமக்குமஞ்சார்
வாசனைசா ருன்பேர் வழங்கி னடுங்குவரே
தேசதி பொற்பூணூல் திகழ்மாமணிமார்பா
ஏசுங் கருங்காக மேறுஞ் சநீசுரனே (74)

ஒருகா லுறு நமக்கெவ் வும்பருமாற் றுமொன்றோ
இருகால் பெருமை யிருந்தாய்நீ காகமதில்
தருகா வலாவாலா தாட்சண்யா பாற்கடற்கோர்
மருகாவென் றன்பமுற வைப்பாய் சநீசுரனே (75)

ஆரின்ப மீந்தா ளலது துன்ப மீவாயே
லாருந் துணையிலையெற் கையா வபயமென்றேன்
பேரின்ப வெள்ளப் பெருக்கைத் திறப்பதற்கோர்
சாரன்ப னான தருமா சநீசுரனே (76)

முத்தாரந் தோள்புரள மோக முதுமகள்பால்
வித்தாரம் பேசி விளையாடும் நாயகனே
சித்தா சிவம்படைத்த செல்வா வுலகுணரு
முந்தா முனியான மூர்த்தி சநீசுரனே (77)

பொருமை யுடையானே பொல்லார் தமைவாட்டும்
பெருமை யுடையாய் பிரமாண்ட மாரூபா
அருமை யுடனுனையா னாராதித் தோதிடுவேன்
தருமமென நல்வாழ்வு தாருஞ் சநீசுரனே (78)

பொல்லாய் புலாலுண் புலையாய்வெம் பொய்யாய்நீ
செல்லா யெனநீ சினந்துசினந் தேசிடினும்
வல்லா யுனது மலரடியைக் கைதொழுதேன்
நல்வாழ்வு தந்துதவிந் நாளே சநீசுரனே (79)

எத்தனைதான் குற்ற மெதிர்த்தடிமை செய்திடினு
மத்தனினின் பூந்தா ளடைக்கலமாப் போற்றியதா
லத்தனையும் நீபொறுத்திவ் வாருலகி னல்லதெல்லாஞ்
சித்த மகிழ்ந்தருளிச் செய்யுஞ் சநீசுரனே (80)

பாவியா னானும் பாதஞ் சதமெனவே
கூவி யழுதேன் குறைதீர நன்றருள்வாய்
வாவி மலரிலன மல்குதிரு நள்ளாற்றே
தேவ நளனைவிட்ட செல்வா சநீசுரனே (81)

ஏழை படும்பா டிதுகாறும் பார்த்திருந்தும்
வாழென்றோர் வார்த்தை மகிழ்ந்தருளக் கூடாதோ
ஊழதனைக் கோலா யுதவியுல காண்டுவரும்
வாழைநிகழ் நள்ளாறாய் வாழீ சநீசுரனே (82)

நித்தநித்த முன்புகழை நேரே நிகழ்த்திடுவே
னத்தமெத்தும் பூவா லருச்சித்தே தோத்தரிப்பேன்
சுத்தபத்து மத்தா டொழுதே யிரஞ்சிடுவேன்
வித்தகத்தா யின்ப மிகச் செய் சநீசுரனே (83)

உண்மை யுணரா ருனைப்பொல்லா னென்பார்கள்
மண்மீ துனாலலவோ வாழ்வுதாழ் வீதிதென்றே
கண்மு னறிந்து கடவுளடி எண்ணிவினை
பண்ணும லுய்ந்தாரே பாவா சநீசுரனே (84)

இந்த வுலகிடைநீ ரேன்பிறந்தீர் சீவர்களின்
சிந்தை தெளிந்துலகைச் சீயென் றருவருத்தும்
பந்தமுத்த ராகிப் பரஞ்சோதி வாழ்வுறற்கே
வந்தவரென் றெண்ணார் மனிதர் சநீசுரனே (85)

துன்ப முடிதனிலே தோன்றுமா வின்பமென
வன்ப ரறிவா ரறிவாரோ வேழையரே
நின்பெருமை யார்காணி னைவார்நீ நீங்கவணே
தன்பெருமை யண்டமெலாஞ் சாற்றுஞ் சநீசுரனே (86)

முன்னா ளிழைத்தவினை மூட்டைதனைத் தானெடுத்து
பின்னா னிலத்தார்க் கிசைக்கவந்த புண்ணியனைக்
கன்னாபின் னாவெனவீண் கத்தினா லென் பலனென்
உன்னா தாளடைந்தா ருய்வார் சநீசுரனே (87)

நல்வினைகள் வந்தால் நமக்குநமக் கென்றோடு
மல்வினையைக் கண்டா லரண்டோடும் பேயுலகம்
செல்வாவுன் சித்தந் திரும்பினா லல்வினையும்
நல்வினைக ளாகாதோ நாதா சநீசுரனே (88)

கட னேற்க வந்தானைக் காணினயங்தோதா
னுடன்போருக் கேகி யுருமியவன் கோபபுற
வடம்பேசி னென்படுவா ரஃதேபோ லுன்னாணைத்
திடங்கண்டு தாழ்வார் செயிப்பார் சநீசுரனே (89)

வம்பினரை லோபியரை வாட்டவந்த மாதவனை
நம்பி னினைவார்க்கென் னாளுந் துயரமில்லை
வெம்பு மனத்தீர் விடுமினும் வெங்கவலை
கும்பிடுமி னன்கருள்வார் கொம்பன் சநீசுரனே (90)

ஆரா லுங் கூடாவுன் னாக்ஞைதனை மீறுதற்கு
வீராதிவீரா விசயசெய வித்தாரா
தீராவொய் யாராசிங் காரா கெம் பீராவோங்
காரா வுகாராசி காரா சநீசுரனே (91)

எள்ளெண்ணைத் தீபா விலங்குமண மாளிகையா
விள்ளுஞ் சநிவிரதர் வேண்டோ ருபகாரா
வள்ளலையு மாண்டியென வைத்திடவு மாதீரா
தெள்ளுதமிழ் பூண்டுநலஞ் செய்வீர் சநீசுரனே (92)

புகைபுகா வெங்கும் புகுந்தாங்கு மண்டமதி
வகைவகையாய்ச் செய்திடவு மாவல் லமைபடைத்தாய்
தகைமிகு யாரேனுந் தன்திரத்தை காட்டிவிடும்
பகைமையி லாய்வாழப் பாருஞ் சநீசுரனே (93)

செங்கிருவா ரன்பர் செயலறிந்து மாதரிக்கு
மந்தாரமைக் காகத் தமர்ந்துலவு மாசரனே
சுந்தாரகல் லோரே தொழுதா சுரைப்போனே
சந்தன் வினைதீர்க்கு மெந்தாய் சநீசுரனே (94)

உன்னுண்மை சேட னுரையாத் தகையுடைத்தே
லென்னு வுரைப்பெளிதோ வேந்தலே காத்தருளும்
மன்னு திலோதனனே மன்னவருளே தலைவா
இன்னு ளிகசுகமெற் கீயுஞ் சநீசுரனே (95)

தாமத் தடந்தோளா சாம்றுணி வாசகனே
சேமத் திடையா திகழ்துயிலா கைக்கோலா
காமத்தி னுன்முதுவாள் கட்டியணை காந்தாரற்
சாமத்தும் நற்சுகமே தாருஞ் சநீசுரனே (96)

நித்தமலை கங்கைதொறும் நீராடி னென்பலவாம்
புத்தகங்கற் றின்னும் புராணவகை யோதினென்னும்
சித்தமுனக்குத் திரும்பா திருக்குமென்று
லெத்தவந்தா னென்புரியு மேசுஞ் சநீசுரனே (97)

மெய்யா வினைதீர் விசயா தவசெபமிற்
பொய்யாளர்மாட்டே பொருக்கோபங்கொள்வோனே
ஐயாவென் றுள்ள மழுங்கித்தாழ் வார்க்கிதஞ்செய்
துய்யாநள் ளாறுய் துரையே சநீசுரனே (98)

ஆரேனு முன்சதக மாமிதனை யோதுவரே
னோரே யவர்வினைக ணீண்மலைபோ னின்றாலும்
தேரேருன் றந்தைமுனஞ் சேர்ந்தபனி போனீக்கிச்
சீரே புரிந்தருளிச் செய்வீர் சநீசுரனே (99)

மக்கள்பல பெற்றுமிந்த மானிலங்க ளுள்ளவரை
தக்க பெயருந் தருமமுயர் ஞானமதும்
பக்கத் துணையுமட்ட பாக்கியமும் வந்ததவ
வக்கிரமி லாதருள்வீர் வாழி சனீசுரனே (100)

---

ஸ்ரீ சனீசுரர் சதகம் முற்றுப்பெற்றது.

---

வாழிக்கலி விருத்தம்.

வாழிதென்பனை யூர்மகா னென்குரு
வாழிமுத்தம்மை யாமெம்பிராட்டியே
வாழிகுன்றைநன் மேலமடாலயம்
வாழிநங்கள் கணபதிச் சாமியே

சுபம்! சுபம்!! சுபம்!!!



ஓம் ஸ்ரீ குருவே நம:

# கல்லல் ஸ்ரீ நற்கனி அந்தாதி.

---

கட்டளைக் கலித்துறை

அந்தாதி கோடி யரணாகு நற்கனி யம்மணிமே
லந்தாதி பாட வடியேற் குவாமுக வைங்கரத்தான்
செந்தாதி னூடு திகழ்பூஞ் சிலம்படித் தேன்கமலந்
தந்தாதி னைப்பொழி லார்கல்வி வாழமுன் னிற்குமே.

## நூல்

திருவருந் தேவ ரடியாரு முய்யச் சிலம்பரையன்
றிருவருந் தாமத் தடந்தோட் டடாதகை தன்னிகரீண்
டொருவருங் காணா னுயரிக் கிடக்கை யுறுநற்கனிச்
செருவரும் பாநகை யாடா ளெனாளுமென் சென்னியவே

சென்னியி லீசன் றிருமல ராகமுன் றேடிவைத்த
கன்னியின் பாத கமலத்தை யன்றிக் கனவினுமோ
ரன்னிய தெய்வ மடைவன்கொ லோமயி லாடுமைவான்
மன்னிய சோலை மலிவாவி சூழ்கல்வி வாணர்களே (2)

வாணறைக் கஞ்ச மலரா ளிளம்பின்னை வானமின்னும்
பேணறை தந்தினை பெண்பெரு மாள்கல்விப் பீடுவந்தே
தாணறை மேனி தனையீந்த தாயினித் தாயை யெண்ணா
வீணரை யென்றுகொல்லோ விடும்பாவ வினைவிலங்கே (3)

விலங்குந் திரிதரு விண்ணா டுருவடர் வெற்பகம் போய்த்
துலங்குந் தவப்பெரி யோருந் தொழுந்துணைத் தூயசெந்தா
ளலங்கும் புலைமனத் தன்பா யமைத்த தறையவற்றோ
இலங்குங் கலாப மயிலேயெ னற்கனி ஈசுரியே (4)

ஈசரி தேனு றெழிலார் பொழிறவ ழேந்துகொண்மூ
பாசரி போலும் பணிமேடை யிஞ்சியிற் பாவுகல்விப்
பூசரி கைக்கனி வாய்ப்பூங் குயிற்கன்னி பொன்புகழைப்
பேசரி தாந்தவம் பெற்ருற் பெரிது பிறிதில்லையே (5)

இல்லைச் சதமென் றிருப்பினு மில்லை யிழியினுமென்
சொல்லைச் சததளத் தூர்தா மரைப்பிரான் ரேமறவாக்
கெல்லைக் கடங்காப் புவனமுந் தாண்டியங் கெய்திநின்ற
முல்லைக் குறுநகை யரணற் கனிபத முன்னுமினே (6)

முன்னும் படியொரு மூர்த்தியுண் டோவிந்த மூவுலகு
மன்னும் பொருட்களு மற்றைய யாவுந்தன் மாத்திரமாய்
மின்னும் பசுங்கொடி வேதாந்த நற்கனி மெல்லடியைத்
தன்னந் தனிநினைந் தானந்த நித்திரை தங்குவர்க்கே (7)

தங்குந் தராதல மெங்குந் தழைத்த தனிக்கொடியைச்
சங்குந் திழைகுழைத் தாளுேடு மாடிய சங்கரியைப்
பொங்குந் தயாபர நற்கனித் தாயையோர் பூவனத்தே
அங்கங் குளிர வடியே னகங்கொண் டடைந்தனனே (8)

அடையுங் கடம்ப மலர்மாலை தேன்புர ளாறிருதோ
ளுடையெங் குமார ரொடுபோ ரிழைத்தோங் குரவசுரோ
ரிடையுங் கிரியு முடையும் படிநட மிட்டவள்கட்
கடையுங் கபாலமுங் கைவேலுங் கண்டனங் கல்வியிலே (9)

கல்வியைக் கற்றுங் கதியான நற்கனிக் காரணமெய்ச்
செல்வியைத் தேடித் தெரிகின்றி லீரெவன் றீருமென்
மல்வினைத் தும்மை மலேமே லலேமேல் வளங்கனன்மேற்
பல்விதத் தோட்டிப் பரிதாப மூட்டும் பயங்கரமே (10)

பயமென்று சொல்லுவர் பார்ப்பார வல்லி பதத்தொழும்பே
நயமென்று கல்வி நகர்மேவு பூங்கா ணடுவருட்கோ
மயமென்று மாறு மகராணி நற்கனி வாலையன்போ
தயமென்று மோர்பொழு தெய்தாத பாதகர் தானெங்குமே

தானென வெல்லாந் தவத்தோ ரறியத் தகுவகையோ
தானென வைகு மவர்மீ திருந்தா டானிடத்தாய்
மானென வில்வத் தருநீழனின்ற வனநற்கனி
தேனென மெய்த்த கனிவாய் திறந்தொன்று செப்புகவே

செப்புங் குமிழியுஞ் சக்கர வானமுஞ் செவ்விளநீ
ரொப்புங் களப முலைமே கலைமிளி ரோவியமென்
றப்புங் கிடையு மலமறக் கொண்டா டானிடச்செங்
துப்புந் துதியத ராய்கல்வி மாநகர்ச் சுந்தரியே (13)

சுந்தர மிக்கநின் றாறாபு ராரத் துணைமணத்தா
ளந்தர ரேனு மடையா தடைவரோ வைக்கியவீ
டிந்திர ரும்ப ரிகராயி னேருநன் கேத்தெடுக்குஞ்
சந்திர வாணுத லாய்கல்விவாச தயாபரியே (14)

தயாநித்த மாருத தாயாய்த் தமனியத் தண்டைகொஞ்சத்
தியானித்த ஞானிகள் செய்காரி யஞ்சித்தி செய்யவந்து
மயானத்தி லாடியு மன்றே புகுந்தும் வளர்ந்தறிவாய்
வியாபித்த பூங்கொடி கல்விமா நாட்டில் விளைகின்றதே (15)

விளையும் பவளத் திருவாயு மைப்படர் வேல்விழியுங்
களையும் பணியு மிடறும்புன் மூரலுங் கைமலரும்
வளையுங் கொடியிடை யுந்தன மேருவு மாந்தளிர்போற்
கிளையும் பதாகமுங் கல்வியிற் காணக் கிடைத்ததுவே (16)

கிடையா றலங்கக் கிருட்டினர் கொட்டக் கிரணதண்டப்
படையார் வணங்கப் பலதேவர் மொய்க்கப் பரிந்து மன்று
டுடையா ரிடத்தி லுயர்பூம் பசுங்கொம் புலகமுய்வா
னடையாள மாவளர் கல்விமா நாட்டி லமைந்ததுவே (17)

அமையும் படியெனக்கா றுத லோதியென் னல்லலெல்லாம்
நிமையும் பொருதற நீயெண்ணி லாயிள நீலவன்ன
வுமையும் பெயரினை யோதிடின்மூவ ருலகும்பரும்
நமையும் புரந்திடு மென்பாரு னன்பெனே நற்கனியே (18)

கனியே முதிர்ந்த கரும்பே யினிக்குங் கடலமுதே
பனியே படியாப் பசுந்திங்க ளேயருட் பானுவெற்பே
முனியே வணங்கிள மும்மூலை யாய்கல்வி முக்கண்ணியே
இனியேனு முன்றிரு வாயார வெற்கொன் றியம்புகவே (19)

இயம்பும்ப லாகம வேதமு மோது மிவளொருத்தி
சுயம்பென் றறையுந் துறையறி யீர்நலந் தோயறிவா
மயம்பொங் கதீத மவுனனந் தத்தே மருவிநந்தா
றயம்பொங்கு நீலோற் பலவாவி சூழ்கல்வி யாலயத்தே (20)

ஆலங் குடித்தா டரனிடத் தாளிவ ளாறுமுகன்
பாலுங் குடித்த பசுங்கிளி யாள்மணிப் பாம்புமஞ்ச
மேலுங் குடித்திரு காலே வருடவார் வீரர்தங்கை
சேலங் குடித்த விழியாள் வசிக்குந் திருக்கல்வியே (21)

திருக்கா யறியுந் திரிசிய மாயுயர் தீரயசு
ரிருக்கா யதர்வணஞ் சாமம தாயிவை யீரினுற்றுய்
செருக்கா யுயிராய்ச் சிவசத்தி யாய்நின்ற தேமொழியை
ஒருக்காலு மேமற வார்கல்வி மேற்றிக் குணர்ந்தவரே (22)

உணர்விற் குணர்வா யுலகா யுலகூட் டொருசத்தியாய்ப்
புணர்வித்த தாய்ப்புண ராதாய்ப்புராதன பொற்பொருளாய்
துணர்விற் பதாம்புயந் தோமற வீசித் துடிகொண் மன்றங்
கொணர்விற் பனுருட கோபால நற்கனிக் கோகிலமே (23)

கோகில மன்னங் குருகாந்தை காடையுங் கூவடவி
நாகில மென்ன நணுகம் பழன நனிகல்வியாய்
வாகில மென்ன வமரா வதியு மதிக்கு முன்னன்
பாகில மென்ன மறலேனு மெய்தற் கக மஞ்சுமே (24)

அகமஞ் சளிஞ்சி யடரமீனூறம் பலம்பிலஞ்சி
நகமஞ்ச வெண்சங் கெறியவின் றேமழை நல்கலர்க்கான்
மிக மஞ்ச ளாவு வளநாடு கல்விவாழ் மெல்லியலைச்
சுகமஞ் சலித்த பணிமொழி யாளைத் தொழுமின்களே (25)

தொழுமிய லாயிழை தொன்னூற் சதுர்முகன் றேலைகவிண்ணோர்
குழுமிய வாக்கொடு கொண்டாடு கொம்பே குருவெனக்கொண்
டெழுமினு மாணுவத் தூக்கந் தெளிமி னிலாங்கலிசூழ்
விழுமிய கல்விப் பெருமாட்டி நல்லருள் வேண்டு மென்றே

வேண்டுவர் வேண்டுவ மென்மேற் றருதிரு மெய்த்தருவை
மாண்டுவர் வாய்ப்பொன் மலையீந்த செல்வியை மாகுட
ஞண்டுவர்ப் பெய்து மகமா சறத்தாக் கணங்கைமுன்றோர்
ஆண்டுவர் தங்கையை நற்கனித்தாயைத் துதிநெஞ்சமே(27)

துதிக்கும் படியொரு சொன்னவின் றுமெயனிற் றாயதவத்
துதிக்கும் பராபர வத்தா யுகாந்தத்து முள்ளவொன்றுய்
மதிக்குஞ் சதாசிவ மாஞான வீடுகை வல்யமன்றே
கதிக்குங் கபாலிகங் காளிமா கல்விக் கதிமருந்தே (28)

மருந்தாகி யன்பர் மனமாகி ஞான வழியிலுண்டாம்
விருந்தாகி எங்கும் விரிவாகி யின்னும் விபுவதுவா
யருந்தா மூலியென வானந்த நர்த்தன மாடி நல்லோர்
வருந்தாது கல்வி வருந்தாயு மான மனோன் மணியே (29)

மணியும் புதுமலர் மாலையுங் கங்கை வளியருந்தும்
பணியும் பனிநிலாச் சோமனுந் தாங்கும் படர்சடையோ
னணியும் புயமணச் செஞ்சே றழிய வணைந்தகிள்ளாய்
பணியும்ப ரோடடி யேனையுங் காத்திடப் பார்த்தருளே (30)

பார்த்தா டிருநவ கோணத் திருந்தென் பழவினையைத்
தீர்த்தா டியானச் செயறந் தியலிசைச் சீர்பலவுங்
கோத்தா ளடியேன் குறைபறப் பூண்டுதங் கோகனகஞ்
சேர்த்தா ளவளேவ னற்கனி யாகுஞ் சிவசத்தியே (31)

சத்தியங் கைப்பெரு மானுரை யிந்தச பாபதிசார்
சத்தியங் கைப்பெறு மானுரை யாட்கொ டடகுவட்டா
ணித்தியங்கைப்பறநெஞ்செண்ணநேர்ந்ததோர்நீலமுத்தைச்
சுத்தியங் கைப்பெறு கல்வியிற் காணச் சுகந்தருமே (32)

சுகந்தங் கமழிளம் பூமேனி வேற்கட் டுவரிதழ்த்தேர்ப்
பகந்தங் ககலல்கு லாயிழையார்மயற் பற்றகற்றி
யகந்தங் ககந்தைய வாதியு மாற்றி யருச்சனைசெய்
திகந்தங் ககல்லருள் செய்வாணங் கல்வி யிருப்பவளே (33)

இருப்புக்கு நேராய வென்மன துன்ற னிலகநுளாம்
நெருப்புக் குருகுவ தன்றிமற் றென்று நெகிழ்வுறுமோ
பொருப்புக் குபேரன் புகழ்ப்பாண்டி யன்பெற்ற பூவையே
மருப்புச் சடாதர வல்லிமா கல்வி மகேசுரியே (நூன் (34)

சூரியா ரலங்கற் றுளைப்பனு காய தொடியுடைக்கைக்
கிரியா மணிமே கலைகிடந் திந்தின் கிரணமுன்வீ
சிரியாக் கனதன வெண்ணுசி நூனடு வீர்ங்கடற்கட்
பெரியாளை நற்கனிப் பெண்ணுளை வாழ்த்தப் பிழையில்லையே

பிழைக்கும் வழியெது கண்டுகொண் டீரிந்தப் பேயுலகப்
பிழைக்கும் பெருமித வாடாம் பரத்தின் பெருமைகட்கு
மிழைக்குஞ் சிறிய விடையார்க்குத் தேடியிட் டெய்த்தநல்
லிழைக்குஞ் சிவானந்தி நற்கனிபாலன் பயர்ந்தவரே (லா

அயமுந் தகழி யலையிஞ்சி மேற்சென் றடவிபுக்கும்
புயல்வந் துறங்கும் புதுமாடக் கல்வியம் போருகத்தா
ளியல்கொண்டு போற்றுமெனையாண்ட நற்கனிக்கேற்பவிரா
தயல்கொண் டவாவி யுயிர்போகு நாளுந் தழுமுலகே(37)

உலகம் படைத்த வொருபூங் கொடியையென் னுட்கரண)
கலகங் கெடுத்தருள் காருண்ய மூர்த்தியைக் கல்விநன்னுட்
டிலகங் கபாலியை நற்கனித் தாயைநா மெண்ணிநின்றுற்
பலகங்கை தோய்ந்த பலனுட னேதரும் பாரிடத்தே (38)

பாரிக்கு மிக்க பணம்படைத் தார்வாழ் பழனகல்வி
சாரிக் குறுங்கைச் சமாதிசட் கார்விதண் டாமரைப்பெண்
டேரிக் கரைவள ரேகாந்த நற்கனி யென்முன்வந்தால்
மூரிக் கடூரனு முன்னூழு மோடு முறையிட்டுமே (39)

இட்டுண் டிருவினை யீர்வானம் நற்கனி யின்னருட்டு
மட்டுண்டு மாயா மயறீரத் தன்னை மதித்தறிந்தூழ்க்
கண்டுண் டிராவகை காரண ஞானக் களிப்புவந்தே
சிட்டுண்ட தேமொழி யார்மா லகன்றுற் செனிட் பில்லையே

செனிக்கின்ற பல்வகைத் தோற்றமு மாயையுந் தீதுகன் றுந்
தனிக்கின்ற வைவழி வேட்கையுங் கோசத் தழையுமறப்
பனிக்கின்ற பாழையுந் தள்ளியப் பாலாய்ப் படர்ந்திலங்கு
மினிக்கின்ற பூங்கொடி கல்வியிற் காண்டற் கிடந்தந்தகே

இடபத் திருக்கு மிறைதா னுடம்பி லிடங்கொடுத்த
வடபத்ர காளி மகுடசங் காரிகௌ மாரி யென்றே
திடபத்தி கொண்டு தியானிக்கு மன்பரைத் தேடிவருங்
கடபத்ம தாளுடை யாய்கல்வி வாழுங் கறுங்குயிலே (42)

குயிலே யனைய குரலாளை யெங்கள் குலம்புரந்தா
ளயிலே யனைய விழியாளை வின்னகை யாரணங்கை
ஒயிலே புரியு மயிலனை யாளையென் னுள்ளுநின்று
பயிலே ரிளம்பிடி யாளையே பாடுமின் பாவலரே (43)

பாவவர் சூடும் பணிப்பெண்க ளோடுபொன் பாரதிவா
னுவலர் காவலர் யாவரும் போற்றி நலம்பெறுவான்
றேவருங் கண்டு செயசெயா வென்னத் திருக்கல்வியில்
மூவருந் தொண்டுகொண் டாரென்னையாளு முகிழ்நகைக்கே

நகைக்கே மணியும் நடைக்கோ திமமும்நன் னாருடைக்கட்
டொகைக்கோ கடலு மிதழினுக் கல்வியுஞ் சூடிகொண்டை
வகைக்கே முகிலுங் குளத்திற்கு வில்லுமின் வார்தனத்தின்
றகைக்கே குமிழியுஞ் சொல்வார்நங் கல்விச் சவுந்தரிக்கே

தரிக்குந் திருநீறு சந்திரபாலந் தழைத் தருட்கேழ்
விரிக்கும் பிராட்டி யயிரோவியங் கல்வி மேதகையாள்
புரிக்குண் டலாயிழை பூம்பாவை நற்கனி பொற்கமலத்
தரிக்கும் பிதாவா னெல்லார்க்கு மாவ லதிகமுண்டே (46)

அதிகமுண் டூரு முகழிசூழ் கல்விக் கருட்பெரியோர்
பதிகமும் பாடும் பரைஞான நற்கனி பண்வரைமேன்
மதிகமழ் சோலை மலர்மேற் றவழ்ந்து வரவெருவிப்
பொதிகையின் காற்றூற் புணர்முலை யாளுடை போக்கினளே

உடைமணிக் கோவை யொடுமலர் மாலிகை யும்பர்சொற்பா
வடைமணிக் கோவையும் பூணங்க ணற்கனி யார்சிலம்பில்
புடைமணச் சேறணி செவ்விள நீர்முலைப் பூங்கொடிதோட்
டொடைமல ராயளி யாய்மனமே முனக் தோன்றிலையே(48)

தோன்றலென் றெங்கள் துரைராச சண்முக சுந்தரர்க்கெஃ
கீன்றவா லோதர நற்கனி யம்பா ளிரும்பொருப்பில்
மான்றகை யாங்கண் மதிமுகத் தாள்சுனை வந்துவிட்டா
லென்றளர்ந் தோடுகின் றீர்மலர் காணும் மிடம்பெயர்ந்தே

இடங்கண்டு கல்வியே கன்றென்றெ றுருயிர்க் கின்பளிக்குந்
திடங்கண்ட நற்கனித் தேங்குழல் வாசத் திருவரைமேற்
குடங்கண்டு போற்றுங் குளிர்முலைப் பொன்னனங் கூந்தனம்மீ
நடங்கண்ட தென்றுகார் பஞ்சாய்ப் பறந்திங் கலைகின்றதே

அலையா தருளனு பூதிதந் தாளெம் மகமகலா
நிலையாய நற்கனி நீலாம் புயமே னெடுமலைமேற்
குலையா மலரணி கொம்பனை யாட்கென் குறிப்புணர்த்து
மலையாழி பூவளி செவ்வா னுமைநிலா மாலையுமே (51)

மாலையுஞ் சூடி மணிவண்ண னூரு மகான்களும் போற்
றாலயஞ் செவ்வி தனைவான நற்கனி யாள்குவட்டில்
வேலையுஞ் சீறு விழித்தொண்டை வாய்மயின் மெல்லடிதான்
பாலையஞ் சாலிடை யெவ்வாறு போய்வரும் பாங்கியரே (52)

பாங்கிற் பருத்த பலதேவர் பாடிப் பரவசம்பாய்
தீங்கற்ற நற்கனிச் செந்தா மரைமுகத் தேவிகன்மே
லோங்கற் கெதிரா யொளிருத்த ரீயத் துயர்முலைக்கே
வீங்கிற் பொருதிடை யென்றேது மாதிவள் மென்சிலம்பே

சிலம்பன் றருமொரு தீஞ்சொன் மதலாய் திகழெனும்வேட்
கலம்பம் பதாய்வந் தமர்செய்த நற்கனி யம்மைவெற்பிற்
புலம்பும் புதுமலர்ப் பொன்வண்டுகா டுணைப் புண்ணியர்வந்
திலம்பண் டிராரெனி லோர்நாள் யுகம்போ லிருந்திடுமே (54)

இருந்திடுஞ் செல்வ மினிதீனும் நாமே யினிப்பிறவாப்
பெருந்திடஞ் செய்யும் பிரபஞ்ச நோயினம் பேயினம்போந்
திருந்திடுஞ் செந்தமிழ் நாற்பா வலாசு செபதவமுந்
தருந்திடு மென்றுமன் றுடெங்க ணற்கனி தாசருக்கே (55)

தாசரு மும்பர் தனிமுவ ரும்புகழ் தாயிவள்சீர்
பேசரு மார்வென் றுலகறி யும்பிணைப் பீதிமத
நீசருங் காணும் நிலையது வோகல்வி நின்றவிந்தை
யேசருங் காரிய மேழைநெஞ் சேயவ ளென்குருவே (56)

குருவாகி யென்னுட் குடிகொண் டிராப்பகற் கோலமில்லாத்
திருவாகி யண்ட சராசர மாகிமெய்த் தேவர்வைகுந்
தருவாகி யையந் தவிர்த்தறி வோங்குஞ் சமாதிநிலைக்
கருவாகி யாவுங் கலந்தாடு நற்கனிக் கன்னிகையே (57)

கன்னியர் சூழக் கனகா தனத்தோர் கருமணிபோன்
மின்னிய பைங்கொடி மெல்விகல் லாய்திரு வேணிகொண்டு
பின்னிய மாயைப் பசாசைத் துரத்தும் பிஞுகவங்கைத்
தன்னிய ஞர்தனைச் சார்ந்தாடு நற்கனித் தாயுமையே (58)

தாயுந் தகப்பனுந் தானாகி யெங்குந் தனைவணங்கக்
காயுங் கனியுந் தளிருந் தழையவாழ் கற்பகமே
ஆயுங் கலைபயி லம்மா பிராமி யொன் ஞயமுந்தாள்
தோயுங் குலாசல மன்றீன்ற கல்விச் சுமங்கலியே (59)

கலியுறுங் காமக் கயவர்கண் காணுக் கனகசிலம்
பொலியுறு மொண்டுணர்த் தண்டா மரைத்தா ளுடைகறக
புலியுறுங் கோயிற்புராதன காளியைப் பூசைசெய்தாற்(ணிப்
பலியுறும் பாவப் பயனும் பிறவிப் பசாசுகளே (60)

பசாசென மாயைப் படுகுழி வீழ்ந்துழல் பாவிநெஞ்சே
விசாரணை செய்தனை யாரென்று காண விரும்பிலையே
உசாவிய பூவெலா மோர்கணத் தோடி யுலவினென்னுந்
தசாவலை நீக்கரு டாய்வாலை நற்கனி தந்திடவே (61)

தந்தம் வினைப்பயன் றுன்றுய்ப்ப தன்றித் தவிர்வதெங்க
ளந்தமி லானந்த நற்கனி யன்பர்க்கென் றுருவெற்பிற்
கந்தங் கமழ்ந்த கருங்கூந்த லன்னமென் கண்ணெதிரே
வந்தொன் றிரண்டது வாய்வன மெங்கும் வருகின்றதே

வருவ றுமைக்கு மனந்தள ரார்மலை மேல்வரினும்
வெருவ றுன்னுரெங்கள் நற்கனிதாசரொன் வேணுவின்கண்
ணிருவரும் பாமுலைப்பொற்றேர் நிதம்பநல்லேந்திழைக்கிண்
டொருவருங் கட்கினி யோமல்லம் நீயவட் குற்றபின்னே

பின்னைத் தருவலென் ணுதறஞ் செய்மினும் பேர்விளங்கத்
தன்னைத் தருவளென் நற்கனி யென்றே தருமூரன்மா
மின்னைத் தழையிடைமெல்லிய லுன்னோர்விழியுள்வைத்தே
என்னைத் தழுவி ரெனக்கந்தோ டெங்களோ டேசுவளே

ஏசுங் கடவு ளிவளே பிறவெலா மேழையர்கைக்
காசுங் கடவுளி யென்றால காய்நற் கனிவரையாய்
வீசுங் கதிர்மணிப் பூண்மலை யாறாய் விளங்கு கொம்மைத்
தூசுங் குழலுந் தொடிகளுஞ் சோரவார்சூழ்ச்சித்ததே (65)

சித்தச் சிறுதிக டரும்மின் றேநஞ் சிவப்பிரம
மெத்தச் சமாதிகண் டென்றோது நற்கனி மேன்மலைமேன்
முத்தச் செவாயன மோகனக் கண்ணீர் முலைகுதித்தே
மெத்திச் சிதருவ பல்வேறு திங்களா மென்கொடிக்கே (66)

மென்னாண் மலர்தூய்த் தன்னாயின் நாயின் வினைதவிரென்
றுன்னுண்மை யாளர்க் குதவுண்மை நற்கனி ஒள்சயிலப்
பொன்னாண் புரளிடைப் பூமாதர் கண்கவர் புண்ணியருந்
தன்னாணே நேயனென் றேவென்னை வாட்டுவன்சந்திரனே

சந்தா ரணமுஞ் சதாப்பாடு தாசர்தந் தாயெனவந்
திந்தா பதமென யீந்தாட்கொ ணற்கனி யீர்ங்கிரிமேற்
பந்தாப் பெருந்தனங்கைமேற் படைத்தபொற் பாவையிவள்
பிந்தா தறைப்பணந் தந்தா தரித்தல் பெரிதல்லவே (68)

பெரிதாவ தேதெம் பெருமாட்டி யன்பர் பிரியமுற்றா
லரிதாவ தேதென் றலைகூவு நற்கனி யாள்பொறைமேல்
விருதாவி னீமுலை சாய்ந்திவள் மேனி மெலிந்திடினுஞ்
சரிதாதி ஞானவந் தோங்கினு நீங்கிடே றையலையே (69)

தையலை யெங்கட்கு முய்யலை நாட்டித் தகாதெனவிண்
மையலை யோட்டு மகாராசி நற்கனி மாதிரத்தே
மொய்யலை வான்குழற் பூமாலைதாழவென் முன்னிற்குமான்
கையலை யாவிடி னுங்கண்க ளாலுயிர் காத்திடுமே (70)

காத்திடுந் தெய்வக் களிற்றான் கிழத்தி காமுகிழ்க்கும்
பாத்திடுங் கல்விப் பரமேட்டி நற்கனி பாற்குவட்டிற்
பூத்தபின் றங்கிளை போயுற வாடுங்கொல் பூவதுபோல்
வாய்த்தநின் மாமகள் சென்றா ளெனக்குன்றல் வம்பலவே

வம்பே வடிவாய மாசூர சேனை மலைகெடத்தாக்
கம்ப றகழித் திருக்கல்வி நற்கனி யாள்சிலையாய்
சொம்பே பயந்து சுனைமூழ் கிளர்தனச் சோடிவிம்மி
வம்பே திறந்தெமைப்பார்க்குமுன் பால்விழிவாவென்குமே

வாவிக் கயறு மலர்ச்சோலை மன்னுபொன் மாமயிற்பூந்
தூவிக் குலாவனை செப்பஞ்செய் நற்கனி தூஞ்சிகாக்
கூவிக் குருகுகாள் வண்டனம் பூவைகாள் கோகிலங்காள்
நீவிரென் நாதனைக் காணிலெம் மாலை நிகழ்த்துமினே (73)

நிகழும் புரமயி றாக்கணங் கொங்கு நிறைகுயிலா
னெகிழுங் கழிமலர்த் தேனோடு நற்கனி நீள்வரைமேற்
புகழும் புதுமையும் பூரணமாக் கற்ற புண்ணியரை
இகழுங்கொ லிந்திர வேபெற்ற தாயுயி ரீந்ததற்கே (74)

ஈந்தலை வாரல தேற்பா ரிலாச்செல்வ மென்று மிக்க
பூந்தலை வானம் பதுசோலை நற்கனி பூம்பொருப்பா
ரேந்தலை யுள்ளங் கவர்ந்தானை யென்கண் ணெழுதிவைத்த
காந்தனை யாவியா யென்னைமெய் யாக்கினான் கத்தனுமே

கத்துஞ் சுவேதப் பணிலக் குழாத்துழும் பண்ணைகண்மேற்
றொத்துஞ் சுளையுந் துதைகல்வி நற்கனி சொந்த வெற்பிற்
சித்திரக் கொங்கையைச் செந்தாமரையெனத் தேன்குடித்த
முத்திரை வைத்துவிட் டானந்தகாண்மதன் மொய்குழற்கே

மொய்யார மொய்முது கானீண்டு வானத்தைமுட்டிநின்று
டொய்யார மாநிழ லோர்கல்வி நற்கனி யெண்ணகக்கண்
கொய்யாத பூமொட்டி துவென்று கொல்லயன் கோட்டைகட்டி
மெய்யான பொன்மகுடஞ்சூட்டி ஞனிவள்மென்முலைக்கே

மென்னேருமுஞ்சான் மிசைகோடசைந்து வெயிலெறித்தே
மின்னேரி சூழ்வயற் கல்வியா ணற்கனி மேய்சயிலப்
பொன்னே யனையகம் பூம்பாத வல்லி புறப்படுங்காற்
றன்னே ரிலாச்சிலம் பொன்றேசெய் நன்றி தருநமக்கே

நமக்கென்று மின்பம் நவிஞத சத்தி நடேசர்தம்பா
லமைக்கின்ற நற்கனி யாள்சிலை மீதற மாங்கொலிவள்
சுமக்கின்ற பாரம தோகொங்கை மேரைத் துடியிடையாண்
டகக்கொன்று மங்கையர்க் கொன்றோ மாச்செய்த சம்புவுக்கே

சம்பாய்ப் பரியைச் சமைத்தாடு கண்ணுதற் றுணுமெச்ச
மம்பா விகைக்கமை வாங்கல்வி நற்கனி யாரமலைச்
செம்பாகு தேங்கனி பின்பாகு வாசகச் செல்விநெஞ்சில்
வம்பாகு மென்றுணர்ந்தாற்றுணிந் தார்கொல்வருவரிங்கே

இங்கே யிருந்த கடம்போன் றடியா ரிருப்பிடத்துந்
தங்கே ரகண்டிதை பங்கேரு கன்றெழுந் தாய்கலறக்கல்
லெங்கே யிருந்தன ளேகள்வ னுன்பெற்ற யேழைசெவ்வா
சங்காக வார்முலை செங்கோடு காணத் தழுவுதற்கே (ய்

தழுவின் றயாபரி தாயாய தங்கந் ததாகரிதேன்
விழுகின்ற சோலை விளைவான நற்கனி மேருவில்வண்
டுழுகின்ற பூங்குழ லோவிய மேவுளம் போன்முடிந்து
மெழுகின்ற நெஞ்சிலேவம்பின்னு மேன்வைத்திருப்பதுவே

ஏனென் றழைப்பினெதிர்தோன் றியன்ப ரிடஞ்சன்முற்றாய்
வானென்ற சோதி வடிவான நற்கனி மைப்பறம்பிற்
றேனென்ற சொன்மணச் செவ்வல்லி வாய்ப்பெண் சிகாமணியா
ளானென்று நோக்கினார் தானென்னை நோக்கி நகைசெய்யுமே (83)

நகையா னறவா னினைவேய்ப் புயாசல நற்கனித்தாய்
தகையா னறம்புன ருமுத்த வோணத் தடங்குவட்டிற்
றிகையாத நாகந் திருவா ரிசமுகத் திங்களைச்சார்
வகையான பூஞ்சடை மான்வந்த தோசொல்லு வாய்தத்தையே (84)

தத்திப் புனறவழ் தாரம்பி சார்நற் கனிசயிலத்
தெத்திக் கினுங்கமழ் பூவாயும் பாவா யிடையினிதம்
பத்துப் பணத்தினைச் சம்பாதித் தெத்தனை பாடுபட்டோ
மொத்தத் தனத்துணை தேடிவிட் டாயென் முடையினியே

இனிக்குங் கரும்பொடு வாழையுஞ் சாய யிரால்கடுள்ளத்
தொனிக்குந் திரையெறி யாறுய கல்விநஞ் சூலிகுன்றிற்
பனிக்கின்ற பாங்கியை நீங்கியொன் றுய்தல்போற் பாங்கர்வந்தே
தனிக்கின்ற மெல்விரல் லாளிவ ளாரென்று சாற்றுவனே

சாற்றறி வாளர் சபையே றருட்கவித் தாசருண்கண்
கூற்றறி யாதருள் கோவின்ற நற்கனி குங்குமக்கன்
மாற்றறி யாப்பசும் பொற்றொடி யானுந்தன் வாயில்வந்தாற்
றேற்றிடு மென்னைகொல் லோசோம னாடிளஞ் சூரியனே

சூரிய ரிந்திரர் சூலாயு தன் பிதா சீதைசொந்த
னாரிய ரும்புக ழானந்தி நற்கனி யம்மைவெற்பிற்
காரிய மின்றியிப் பூம்பாவை கண்களாஞ் செங்கழுநீர்
மீரிய பூண்முலை மேலுமென் மேலும் விழிப்பதன்றே (88)

அன்றுங் குலாசல ஞனந்த மெய்த வவன்றலேமே
னின்றுங் குறநடங் கொள்ளுங் குழந்தையா நீலிகல்விக்
குன்றுங் குமிழியுங் கோடும்ப ருளமுங் கும்பமும்போற்
றென்றுங் கமழ்ந்த யிளமுலே தாய்க்குநன் றென்செய்வனே

நன்றத் தனேயுநன் நாட்பார்த் திடாதுட னல்குநங்கள்
பொன்றத்தை போன்ற புவனேசை நற்கனி பூதரத்தே
குன்றத் தனேயிரு கோடித் தனந்தந்த கொம்பனேயா
ளின்றத்த மாரதந் தந்தேறி வாமெழன் றிசைகுவளே (90)

இசையன் புருவக் கரும்புரு வாயிசிங் கேறிருக்க
விசைகொண்ட தாண்டவ மாடெங்க ணற்கனி வேணுவிற்
டசையுந் தரள வடந்தாங்கி யேந்தியண் ணுந்தமுலே (பூண்
மிசையென் காம்படச் செங்கட லாமுன் விழிக்கடலே (91)

கடலூறு மாமலே போற்கண்கள் பாய்முலே கண்டரன்போய்
மடலூறு சௌந்தரி வாழ்கல்வி நற்கனி மல்கசலத்
தடலூறு பூமஞ்ச மேற்பள்ளி கொண்டயென் னுசைமன்ன
னுடலூற வந்துவிட் டாலன்று தான்கண் ணுறங்கிடுமே

உறங்குற்ற ஞானிக ளோமோ மெனவுரைத் தோம்பருளாங்
கறங்குற்ற பாற்கடற் கண்ணுண னற்கனிக் கன்னிகற்பர்,
லறங்குற் றணேத்தெனே யன்பாக முத்தமிட் டாதரிப்பான்
புறங்குற்றே வற்புரி வானேயுங் காண்கிலன் பூவனத்தே (93)

வனத்திலே வான்மழை வந்தே புகுந்திட மந்திகள்பாய்
புனத்திலே வண்டுகள் கூத்தாடு நற்கனி பூங்கிரிக்கீழ்
மனத்திலே எண்ணிய வண்ணமுன் னேவரு மாங்குயிலே
ஜனத்திலே யாவருங் கண்ணு யிருத்தல் சகசமதே (94)

சுகமோ தனந்தாத் தாயாய தெய்வந் தருமதுரைச்
சுகமோ தனந்தா நற்கனி யாய்வந்து தோன்றுகல்வி
மிருமோ கனக்குயி லன்ன யிராவடி வெந்துசெல்லத்
தருமோ தனக்கழ கோவிடன் மேல்வைத்த தண்ணளியே

தண்ணுழி யுண்டவர் தங்குஞ் சாதிகள் சார்மலைக்காற்
றுண்ணுல வாய்ப்பணி யோரத்த தாங்கல்வி யும்பரைமாப்
பெண்ணுனை மென்நடைப் பிச்சிவார் கேசப்பெருந்தகையா
கண்ணுனை அம்பட்ட னேபோய் மறிக்குங் கணக்கென்னையே (ய்

கண்க்கங்கை காட்டிய தண்டியுங் கண்டக் கறைப்பிரபும்
வணக்கங்கொள் வையயி லாய்வந்த நற்கனி மாலைவெற்பின்
மணக்குங் கமலமோ தேன்றட்டோ தோதோமான்றடமோ
பணத்தின் பட்மோ மதபீட மோவிவள் பைம்பகமே (97)

பகவா னடியர் பதம்பாடு பைம்பதப் பார்பதிவேற்
குகவா னவர்க்கருள் கோமாட்டி நற்கனி குன்றதன்கண்
மிகவா னளாவிய பொற்கொம்பு பூத்தே விளைபலனு
மகவான பின்பது மூன்போ விருக்குமோ மாமன்னனே(98)

மாமத் தடிபடு மால்வெண்ணை யுண்ணு மகாபெரியோ
னுமத் திராகவ னற்றங்கை நற்கனி காகமல்கும்
காமத்தை நீத்தவென் கைக்குழுந் தாயுனைக்கண்டபின்பெண்
தாமத் தடம்புயத் தார்தனி தூங்கச் சகித்தனரே (99)

சகியா ருடனொரு தண்டிகை யேறித்தன் சந்நிதிமுன்
சிகியாகு மெங்கள் சிவகாமி நற்கனி செஞ்சிலம்பு
நகையாவு மின்ன நமைக்காக்க வந்தரு ணல்கி யன்பாய்ப்
பகையாதி நோய்மிடி பற்றுது தாய்த்திரு பார்த்திடுமே(100)

ஸ்ரீ நற்கனி அந்தாதி முற்றுப்பெற்றது.

நோயணு காவொரு நாளுஞ் சளப்படார் கோற்றுவரும்
பேயணு கார்மனம் பீதியு ரூர்பல பிள்ளை பெற்றே
வேயன தோளி திருமா துமேவநல் வெற்றி கொள்வார்
தாயன நற்கனி யந்தாதி நூற்ளுென்று சாற்றுவரே.

சுபம்! சுபம்!! சுபம்!!!

வாழிக் கலிவிருத்தம்.

வாழி கந்தர் விநாயகர் வைரவர்
வாழி நற்கனி சங்கர மாதவர்
வாழி தெச்சிணு மூர்த்தி மயின்மலே
வாழி கல்வி வளர்சிவ நேசரே.



## பனைசை அந்தாதி பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 11 | செய் | மெய் |
| 5 | 20 | வேசரி | வீசரீ |
| 6 | 20 | தென்றல் | தென்றல |
| 7 | 4 | பெம்லும் | பெல்லும் |
| 7 | 13 | வமக்கொரு | வுமக்கொரு |
| 7 | 24 | சிரம | சிரம |
| 8 | 12 | நாளொன்று | நாளென்று |
| 8 | 13 | புகுஞ் | புகுகுஞ் |
| 8 | 19 | யிட்டிங் | யிட்டிக் |
| 9 | 3 | வெழுளி | வெளி |
| 9 | 4 | யெண்ணை | பெண்ணை |
| 10 | 21 | மழையோ | மழையே |
| 11 | 20 | விண்ணொளி | விண்ணொளியே |
| 12 | 4 | றுனத்த | றுணத்த |
| 14 | 15 | காத்தா | ——— |
| 14 | 17 | இந்ர | இந்திர |
| 14 | 17 | வெட்டு | வெட்கு |
| 15 | 20 | னேதிற | னேதிற் |
| 16 | 17 | ஞைத் | ஞைங் |
| 22 | 18 | கன்றெழு | கன்றொழு |

இந்நூலாசிரியராலியற்றப்பெற்ற

(1) பனையூர் புராணம்.

(2) வைத்தியபாநு.

(3) சாதக போதகம்.

சின்னாளில் வெளிவரும்

---